சிதம்பரத்திலுள்ள, தில்லை கோவிந்த சுவாமி தேவாலயம்.




இதன் ஜீரணோத்தாரணச் செலவுகளுக்காக சர். ராஜா அண்ணாமலை செட்டியார் 3 லக்ஷ ரூபா நன்கொடை அளித்திருக்கிறார்.

உ

ஓம்

பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



| தொகுதி | சுக்கில௵ ஐப்பசி௴ கஉ௳ | பகுதி |
|---|---|---|
| 15 | 1929௵ அக்டோபர்௴ 17௳ | 4 |

## கடவுள் வணக்கம்.

பாட்டளி துதைந்து வளர் கற்பகந னீழலைப்
பாரினிடை வரவழைப்பீர்
பத்மநிதி சங்கநிதி இருபாரி சத்திலும்
பணிசெயும் தொழிலாளர் போல்
கேட்டது கொடுத்துவர நிற்க வைப்பீர் பிச்சை
கேட்டுப் பிழைப் போரையும்
கிரீடபதி யாக்குவீர கற்பாந்த வெள்ளமொரு
கேணியிடை யூறக வைப்பீர்
ஓட்டினை எடுத்தாயி ரத்தெட்டு மாற்றாக
ஒளிவிடும் பொன்னாக்குவீர்
உரகனும் இளைப்பாற யோக தண்டத்திலே
உலகுசுமை யாகவருளான்
மீட்டிடவும் வல்லநீர் என் மனக் கல்லை யனல்
மெழுகாக்கி வைப்பதரிதோ
வேதாந்த சித்தாந்த சமரச நன்னிலைபெற்ற
வித்தகச் சித்தர் கணமே. (1)

சும்மா இருக்கச் சுகம் சுகம் என்று சுருதி எல்லாம்
அம்மா நிரந்தரம் சொல்லவும் கேட்டும் அறிவின்றியே
பெம்மான் மவுனி மொழியையும் தப்பி என் பேதைமையால்
வெம்மாயக் காட்டில் அலைந்தேன் அந்தோ என் விதிவசமே. (2)

சொன்னதைச் சொல்லித் துடிக்கின்ற ஆணவப் பேய்க்கு
இன்னல் வருவது எந்நாள் எந்தாய் பராபரமே. (3)

# அரும்பொருள் விளக்கம்

1. இதனால் தமது கடின சித்தத்தை உருகும்படி செய்யவேண்டும் என்று சித்தர் கணத்தை நோக்கி ஸ்வாமிகள் வேண்டுகின்றார்.

(இ-ள்.) "வேதாந்த சித்தாந்தங்களைச் சமரசமாக பாவிக்கும்படியான—நல்ல தெளிந்த நிலைபெற்ற ஞானச் செல்வர்களாக விளங்கும் சித்தர் கணமே! ரீங்காரம் செய்து வண்டுகள் மொய்க்கும் ஐந்து கற்பக விருக்ஷங்களையும் தேவலோகத்திலிருந்து பூலோகத்துக்கு வரவழைத்து விடுவீர்கள். இந்திரனுக்கே உரிய சங்கநிதி பதுமநிதிகளை, இரண்டு பக்கத்திலும் தயாராக நின்று ஏவல் செய்கின்ற வேலையாட்களைப்போல் கேட்டது கொண்டு வந்து கொடுக்கும்படி நிற்கவைத்து விடுவீர்கள். பிச்சை எடுத்து வயிறு பிழைப்போரையும் மகுடாதிபதிகளாகச் செய்து விடுவீர்கள். ஊழிக்கால முடிவில் தோன்றும் பெருங்கடலையும் ஒரு சிறு கிணற்றுக்குள் அடங்கும்படி செய்து விடுவீர்கள். ஒரு மண் ஓட்டை ஆயிரத்தெட்டு மாற்று ஜோதிப் பொன்னாகச் செய்து விடுவீர்கள். உலகந்தாங்கும் ஆதிசேடனும் இளைப்பாறும்படி கிருபைகூர்ந்து உங்கள் யோகதண்டத்தில் அவ்வுலகைப் பெயர்த்து வைத்துத் தாங்கவல்ல நீங்கள் அடியேனுடைய கல்மனதை நெருப்பில் இட்ட மெழுகுபோல் உருகும்படி செய்வது முடியாமற் போகுமா? இந்த அற்ப விஷயத்துக்கு ஏன் கிருபை செய்யக்கூடாது?" என்பதாகும்.

சித்தர்கணங்களாற் செய்தற்கரிய காரியம் ஒன்று மில்லை என்பார் "பாட்டளி துதைந்து வளர்....................மீட்டிடவும் வல்லநீர்" என்றார். கற்பகதரு, சங்கநிதி, பதுமநிதி முதலியன இந்திரபோகத்துக்குரிய வஸ்துக்கள். சங்கநிதி—சங்கு வடிவாக உள்ளது. பதுமநிதி—தாமரை வடிவாக உள்ளது.

(2) இதனால் உலகமாயையின் வன்மையை நினைந்து இரங்குகின்றார்.

(இ-ள்) "உலகியல் விவகாரங்களை விடுத்துச் சும்மா இருப்பது சுகம் சுகம் என்று சுருதிகளெல்லாம் சதா சர்வகாலமும் முறையிடுகின்றன. பெரியார் வாயிலாகவும் அவ்வுண்மையைக் கேட்டிருக்கின்றேன். எனது பெருமானாகிய மௌன குருவின் திருவாக்கினின்றும் அறிவில்லாமல் தவறி விட்டேன். ஆதலால் அறிவீனததால் கொடிய வஞ்சகாடவியில் அலைந்து திரிந்தேன். ஐயோ! இது எனது தலைவிதியே யாகும்" என்பதாம்.

(3) இதனால் ஆணவம் தொலையவேண்டும் என்று கூறுகிறார்.

(இ-ள்) "தந்தையே! தன்னிகரில்லாத் தனிப்பெரும் பொருளே! கோபாவேசத்தால் அறிவிழந்து சொன்னதையே திருப்பித் திருப்பிச் சொல்லி பதை பதைத்துக்கொண் டிருக்கின்ற அகங்காரப் பேய்க்கு ஒரு நாசகாலம் வந்து அடங்கும் நாள் எது?" என்பதாம்,




## பெண்கள் துயரம்

அஹிம்சா தருமத்துக்குப் பேர்போன நமது நாட்டில்—கண்ணுக்குத் தெரியாத உயிருக்கும் துன்பம் செய்யக்கூடாது, உபகாரமே செய்யவேண்டும் என்ற உயரிய அருளறம் நிறைந்த நாட்டில்—நம்மை அறியாமல் எத்தனையோ உயிர்கள் நம்மால் மடிந்திருக்கும் என்று அதற்காக நித்திய கருமாநுஷ்டானங்களில் பிராயச்சித்தம் செய்துவரும் நாட்டில்-பெண்மக்கள் துன்ப விடுதலை விஷயத்தில் மாத்திரம் முட்டுக்கட்டை மனப்பான்மை காட்டுவது ஆச்சரியமாயிருக்கிறது. மேனாடுகளில் பெண்கள் சுதந்தரக் கிளர்ச்சி வெகு தீவிரம். "இதுவரை ஆண்கள் பெண்களை அடிமைப்படுத்திக் கொடுமை இழைத்து வந்ததற்கு ஒரு அபராதமாக ஆண்கள் எல்லாம் பெண்கள் நிலைமையிலும், பெண்கள் எல்லாம் ஆண்கள் நிலைமையிலும் மாறி இருக்கவேண்டும்; இல்லையேல் சமாதானமான இன்ப வாழ்க்கை நடத்த முடியாது" என்று அறை கூவுவது போன்ற தோரணையில் மேனாடுகளில் பெண் சுதந்தரப் போராட்டம் நடந்துவருகிறது. நமது நாட்டில், இந்த இருபதாவது நூற்றாண்டில், இவ்வளவு நாகரிகம் பரவியிருந்துங்கூட பெண்மக்கள் கஷ்டகாலம் நீங்கும்பாடு வெகு திண்டாட்டத்தில் இருக்கிறது. இப்போது மேனாடுகளில் பெண்கள் விரும்பும் சுதந்தரம் நாம் விரும்பவில்லை. ஆண்கள் செய்யும் வேலையெல்லாம் பெண்களும் செய்ய ஆசைப்படுவது பெரிய பைத்தியகாரத்தனம். இயற்கையில் பெண் தன்மை வேறு, ஆண் தன்மை வேறு. ஆண்மையும் பெண்மையும் நேர் முரண்பட்ட குணங்கள். பெண்கள் பெண்மை

யைப் பேணுவதும், ஆண்கள் ஆண்மையைப் பேணுவதுந்தான் சிலாக்கியம். ஆண்கள் செய்வதெல்லாம் பெண்கள் செய்யவேண்டும்; பெண்கள் செய்வதெல்லாம் ஆண்கள் செய்யவேண்டும் என்பது அறியாமை. இது முடியக் கூடிய காரியமும் அல்ல. உலகில் எத்தனையோ காரியங்கள் இயற்கைவிரோதமாக நடைபெறுவது போல ஒரு சமயம் ஆண் பெண் உரிமைகளையும் குழப்பி பலாத்காரமாக நடைபெறச் செய்தாலும் விரைவில் அதிருப்தி தோன்றி இன்ப வாழ்க்கை வீழ்ச்சி அடையும் என்பதில் ஐயமில்லை.

இப்போது மற்ற நாடுகளில் நடைபெற்றுவரும் பெண் சுதந்தரப் போராட்டம் யாம் மேற்காட்டிய உண்மையை அலட்சியம் செய்து விட்டதென்றே நினைக்கவேண்டி யிருக்கிறது. மேனாட்டுப் பெண்கள் ஆசைப்படுகிறதுபோல் ஆகாயவிமானங்களிற் பறந்து உலகஞ்சுற்றி வியாபாரம் செய்வது, யுத்தக் கப்பல்கள் செலுத்துவது, பீரங்கி தாங்கிப் போர்புரிவது, ராஜீய நிர்வாகங்களில் பெரிய பெரிய பதவியேற்று அதிகாரஞ் செலுத்துவது, ஒருநாளைக்கு ஒருவனைக் கலியாணஞ் செய்வது, நினைத்தவனோடெல்லாம் கட்டித் தழுவிக் கூத்தாடுவது முதலிய பொருத்தமற்ற உரிமைகள் நம்முடைய பெண்களுக்கு வேண்டாம்.

பல நூற்றாண்டுகளாக உரிமையிழந்து அடிமையில் ஆழ்ந்து அல்லல் அநுபவித்த பெண்ணுலகம் திடீரென்று இப்போது விழிப்படைந்து சுதந்தரக் கிளர்ச்சி செய்து, அதிகப்படியான உரிமைகள் கேட்பதால் அந்நாடுகளில் உள்ளவர்கட்கு ஆக்ஷேபணையோ ஆச்சரியமோ தோன்றுவதில்லை. இதுவரை பெண்ணுலகை ஆட்டி வைத்த ஆணுலகம் வாயை மூடிக்கொண்டு பணிந்து வருகிறது என்றுகூடச் சொல்லலாம். ஆனால் இம்முறை நமக்கு வேண்டவே வேண்டாம்.

நாம் விரும்புவதெல்லாம் பெண்களை அடிமைகளாகவும் விலங்குகளாகவும் நடத்தும் மனப்பான்மை ஒழிந்து அவர்களை கிருஹலட்சுமிகளாக விளங்கச் செய்யவேண்டும் என்ற மனப்பான்மை நாட்டில் ஓங்கி வளரவேண்டும் என்பதே. நேயர்களே! நமது நாட்டுப் பெண்மக்கள் நிலைமை எவ்வாறு இருந்து வருகிறது என்று சற்றே சிந்தித்துப் பாருங்கள். அவர்களுடைய துயரங்கட்கு எல்லை உண்டா என்று கேட்கின்றோம்? மகளிர் ஆடவர்க்கு அடிமைகள் என்ற எண்ணமே தொன்று தொட்டு ஆழமாக

வேறொன்றி யிருக்கிறது. பெண்கள் தங்கள் உணவைப் போதிய அளவு கொள்ளக்கூடாது, அதுதான் அழகு என்றும், இவர்கட்கு முட்டாள் தனமே ஒரு நல்ல ஆபரணம் என்றும் சொல்லப்படு பவை போன்ற விபரீதமான அபிப்பிராயங்களை வைத்திருக்கும் நாடு, நமது தேசத்தைத் தவிர வேறொன்றில்லை. நமது நாட்டில் பெண் கள் ஆடவர் கண்களில் மக்கள் வருக்கத்தைச் சார்ந்தவராகவே தோன்றுவதில்லை. நல்லிசைப் புலமை மெல்லியலார் பலரும், அருந் தமிழ் அன்னை அவ்வைப்பிராட்டியும், வீரத்தாய்மாரும், புகழ் படைத்த பிற மங்கையரும் வாழ்ந்து அலங்கரித்த தமிழகத்தில் பெண்கள் வருக்கத்துக்கே பெரிய அவமானகரமான பழியையும் இழிவையும் ஒரு பெருங்காப்பியப் புலவர் சுமத்தியிருக்கிறார். அதாவது

பெண்ணெனப் படுவ கேண்மோ பீடில பிறப்பு நோக்கா
உண்ணிறை யுடையவல்லா ஓராயிர மனத்த வாகும்
எண்ணிப் பத்து அங்கை இட்டால் இந்திரன் மகளும் ஆங்கே
வெண்ணெய்க் குன்று எரியுற்றாற்போல் மெலிந்துபின் நிற்ப ரன்றே.

என்ற பாட்டைக் கவனியுங்கள். இதில் பெண்களுக்கும் பெரு மைக்கும் வெகுதூரம் என்றும், பிறப்பைப்பற்றி அவர்கட்கு அக் கறை இல்லை, எந்த வகுப்பிற் பிறந்தவனையும் காமக்கிழவனாக ஏற் றுக்கொள்ளுவர் என்றும், அவர்கட்கு மனநிறை—உறுதி கிடையா தென்றும், ஆயிரம் மனம் படைத்தவர்கள் என்றும், கற்பைப் பற் றிக் கவலைகொள்ளாமல் தேவேந்திரன் மகளாயிருந்தாலும் பத்துப் பணத்தை எண்ணிக் கையிலே எறிந்து விட்டால் வெண்ணெய் மலை யில் நெருப்புப் பற்றி உருகுவதுபோல் மனம் உருகிக் காசுகொடுத் தவன் பின்னே ஓடிவந்து நிற்பார்கள் என்றும் திருத்தக்க தேவர் என்ற புலவர் கூறியிருப்பது எவ்வளவு வெறுக்கத்தக்கது என் பதை நேயர்கள் ஊன்றி நோக்குவாராக. இதன் மூலம் தேவ ருடைய புலமைக்கோ, பாரகாவியம் பாடிய தீரத்துக்கோ யாம் இழிவு கற்பிப்பதாக நேயர்கள் நினைத்துவிடக் கூடாது. நமது நாட்டில் பண்டிதர் முதல் பாமரர்வரை பெண் மக்களிடம் எவ்வளவு அவநம்பிக்கை வைத்திருக்கிறார்கள் என்பதற்கும், இந்த அவநம் பிக்கை காரணமாக அவர்களை எவ்வளவு கொடுமைகட்கும், துன்பங் கட்கும் உட்படுத்துகிறார்கள் என்பதற்கும் ஒரு உதாரணமாகவே எடுத்துக் காட்டினோம். இதற்காகத் தமிழ்ப் பேரன்பர்கள் எம்மீது சீற்றங் கொள்ளா திருப்பாராக.

பெண் மக்கள் ஜடப் பொருள்கள் இல்லை. அவர்கட்கும் ஆன்மா, உணர்ச்சி, அறிவு உண்டு. அவர்களிடம் பெண்மைக்குச் சிறந்த நாணம், மென்மை, அடக்கம், அச்சம், பயிர்ப்பு முதலிய குணங்கள் இயற்கையில் அமைந்து விளங்குகின்றன. அவர்களுடைய இயற்கைத் தன்மைக்கேற்ற கல்வி அறிவு கொடுத்து அக்குணங்களை வளர்த்து அவர்களை மாட்சியுறச் செய்யவேண்டும். அப்போது மக்கள் வாழ்க்கையில் ஒரு தனிப்பட்ட இன்பவொளி வீசும் என்பதில் சந்தேகமில்லை. அறிவு விஷயத்தில் ஆண்களுக்குப் பெண்கள் இளைத்தவ ரல்லர். ஆண்களுக்கு எவ்வளவு அறிவு உண்டோ அவ்வளவு அறிவு பெண்களுக்கும் உண்டு. இதற்கு ஏராளமான திருஷ்டாந்தங்கள் காட்டலாம். மேனாடுகளிலும் நமது நாட்டிலும் ஆண்டுதோறும் வெளிவரும் பெண் பட்டதாரிகள், பெண் டாக்டர்கள் முதலியவர்களின் புள்ளி விபரங்களே பெண்களின் அறிவுடைமைக்குப் போதிய அத்தாட்சியாகும். ஆதலால் அவர்கள் பேதைமையிற் சிறந்தவர்கள் என்றோ, பாவ ஜன்மங்கள் என்றோ கூறிவிடுவது அறியாமையே யாகும். மகளிரின் பெண்மை நலங்கனிந்த சுகுமார லளிதகுணங்களை ஆடவர் அலட்சியஞ் செய்துவிட்டுத் தங்களுக்கு இயற்கையாக அமைந்திருக்கிற ஆண்மை மிடுக்கால் அவர்களை அடக்கி அடிமைகளாக்கிப் பெரும் பழிக்கு நிலைக்களனாகச் செய்து விட்டனர். பெண்களுக்குக் கல்வியே கூடாது என்று சாஸ்திரங்களால் தடைசெய்து விட்டனர். பொருள் உரிமை இருந்தாலும் சிறிது சுகமாகக் காலங்கழிக்கலாம். அதுவுங்கிடையாது. ஆண்களுக்கே சொத்துரிமை உண்டு என்ற விதிசெய்து எல்லாவழிகளிலும் நிர்ப்பந்தம் உண்டாக்கி விட்டனர். பெண்களுக்கும் தனியாகச் சொத்துரிமை இருந்தாலொழிய "சிறு வயதில் தாய் தந்தையர், வயது வந்த பின்னர் நாயகன், நாயகனுக்குப் பிறகு மக்கள் அல்லது தாயாதிகள் ஆகிய இவர்கள் வசத்திலேதான் பெண் இருக்க வேண்டும், சுதந்தரமாக இருக்கும் உரிமை பெண்ணுக்கு இல்லை" என்ற விதி எவ்வளவு கஷ்ட நஷ்டங்களுக்கு உட்படுத்தும் என்பது கூர்ந்து நோக்குவார்க்கு நன்கு விளங்கும். பெண்களுக்குக் கல்வியும் இல்லை பொருளும் இல்லை என்ற நிலைமையில் அவர்கள் மிருகங்களாகப் பாவிக்கப் படுவதிலும் துன்பங்கட்கும் கொடுமைகட்கும் உட்படுவதிலும் என்ன ஆச்சரிய மிருக்கிறது?

ஆண்மையிற் சிறந்தவர்களாகவும், கல்வி கற்று அறிவு வளர்ச்சி செய்து கொண்டவர்களாகவும் விளங்கும் ஆடவர் எல்லாச் சாஸ

திரங்களையும் தங்கள் சுய நலத்தை அடிப்படையாக வைத்தே ஆக்கி வைத்துக்கொண் டிருக்கின்றனர். கற்பு என்பது மக்கள் எல்லாரும் உயிராகப் போற்றிக் கைக்கொள்ள வேண்டிய ஒரு அரும்பெருங் குணம். இந்தக் கற்பு ஆண் பெண் இருபாலாரையும் மேன்மக்க ளாகச் செய்யும் மாட்சிவாய்ந்தது. கற்பு பெண்களுக்கேதான் சிறப்புரிமை வாய்ந்தது என்ற ஒரு விபரீத எண்ணம் எப்படியோ நமது நாட்டில் நிலைத்து விட்டது. ஆண்களும் கற்புநிலை தவறக் கூடாது என்ற தருமம் நமது நீதி நூல்களில் நிறைந்திருந்தாலும் இந்த தருமம் பெரும்பாலும் ஆடவரால் அலட்சியம் செய்யப்பட்டு வருகிறது. இந்த நெறி கடந்த செயலுக்கு அநுகூலமாகச் சாஸ் திரங்களும் வளைந்து கொடுக்கின்றன. பெண் மக்கள் எல்லாம் வாயில்லா மூடப் பூச்சிகளாக இருக்கின்றமையால் இவ்விஷயத்தில் கேள்வி முறை இல்லாமல் போய்விட்டது.

இப்போது நமது நாட்டிலும் பெண்சுதந்தரக் கிளர்ச்சி நடை பெற்று வருகிறது. ஆயிரக் கணக்கான ஆண்டுகளாகப் பெண் களை விபரீதப் போக்கில் நடத்திவந்த நம்மனோர்க்கு இந்தப் புதிய கிளர்ச்சி மனதுக்குக் கஷ்டமாகத்தான் இருக்கும். ஆனால் காலச் சக்கரம் வேறுவிதமாக ஓடுகிறது. தற்காலத்தில் பெண்களின் உரிமை வேட்கையை வெறும் மிரட்டல்களால் அடக்கிவிட முடி யாது. இப்போது அவர்கட்கு ஏதேனும் ஒரு வழியில் நல்ல விமோசனம் ஏற்பட்டுத் தீரவேண்டும். இக்காலத்துப் பெண்கள் மேனாட்டு நடையுடை பாவனைகளையே தங்களுக்குரிய ஆதர்சமாக வைத்துக்கொண் டிருக்கிறார்கள். மேனாடுகளிலேயே பெண்களின் போக்கு பொருத்த மில்லாமல் இருக்கும்போது அந்த நிலைமை நமது பெண்களிடமும் வந்துவிடுமோ என்று அஞ்சுகின்றோம். அந் நாட்டு முறைகளைப் பின் பற்றாமல் இருக்குமாறு செய்யவேண்டிய கடமை கற்றறிந்த நமது பெரியோர்களைப் பொறுத்திருக்கிறது.

இனிமேல் பணத்துக்கு ஆசைபட்டு 73-வயதுக் கிழவனுக்கு 13-வயதுப் பெண்ணைக் கலியாணஞ் செய்து கொடுப்பது, தாரம் இருக்கவே அறியாத குழந்தைகளை மறுதாரமாகக் கொடுப்பது, 11-வயதில் கலியாணம், 12-வயதில் ருதுவாதல், 13-வயதில் கர்ப்ப வேதனைக்கு உட்படுத்துவது முதலிய கொடுஞ் செயல்களை மேன் மேலும் செய்துகொண்டே போகாமல் நம்முடைய வாழ்க்கை நலத் தில் முழுப் பொறுப்பு ஏற்றுக் கொள்ளக்கூடிய பெண்களின் பரி தாப நிலைமையை ஒழிக்கத் தீவிரமாக முயற்சி எடுக்கவேண்டும். நம் முடைய மனங்களை விரிவாக்கி அவர்கள் பால் பூரண அன்பு செலுத்த வேண்டும். இவர்களுடைய முன்னேற்றத்துக்குத் தடை செய்கிற சாஸ்திரங்களையும் விரிவாக்க வேண்டும். பெரியோர்கள் மனம் வைத்தால் வெகு உற்சாகமான முறையில் சீர்திருத்த வேலை களைச் செய்துகொண்டுபோகலாம்.

இக்காலத்தில் சாஸ்திர விருத்தம் என்று கருதப்படும் எத்தனையோ காரியங்கள் அநுஷ்டானத்தில் வந்து சாதாரண மாகி விட்டன. அவற்றைப்பற்றி இப்போது யாரும் மூச்சு விடுவதுகூட இல்லை. இந்தமாதிரி பரம்பரை வழக்கத்துக்கு முரண் பட்ட நடவடிக்கைகள் சகஜமாகி விட்டதின் காரணம் என்ன என்று பெரியோர்கள் ஊன்றிச் சிந்திக்கவேண்டும். காலமாறுத லின் பயனாக ஏற்பட்ட இன்றியமையாத தேவைகள் தொன்று தொட்ட வழக்கங்களை அலட்சியஞ்செய்து ஆட்சிபுரிந்து வருகின் றன. இவற்றை எதிர்த்துநின்று போர்புரியாமல் ஒழுங்குபடுத்த வேண்டியதுதான் பெரியோர்கள் இப்போது செய்ய வேண்டிய வேலையாகும். பெண் மக்களின் குறைகளை காதிற் போட்டுக்கொள் ளாமல் எடுத்தற்கெல்லாம் முட்டுக்கட்டை போட்டு வந்தால் மேனாட்டுப் பெண்களிடம் தோன்றியுள்ள அதிக்கிரமச் சுதந்தரப் பேராசையும் முரட்டுக் குணமும் நம்முடைய பெண் மக்களிடமும் தோன்றி அமைதியற்ற வாழ்க்கையும் சேவல நிலைமையும் ஏற்பட்டு நாட்டைக் கெடுத்துவிடும் என்று எடுத்துக்காட்ட விரும்புகிறோம். பழைமையில் பற்றுள்ளங்கொண்ட பெரியோர்களும், சமூக சீர் திருத்த அறிஞர்களும் ஒன்றுகூடி நமது நாட்டுப் பெண்மக்கள் முன்னேற்றத்துக் குரிய வழிகளை வகுக்கவேண்டும். பெண் மக் கள் திறம்பட குடும்ப நிர்வாகஞ்செய்து வெளிவிவகாரங்களில் ஈடு படக்கூடிய ஆடவர்கட்கு உற்ற துணைவர்களாகவும், இளங் குழந்தைகட்கு வீட்டு ஆசிரியர்களாகவும் விளங்குவதற் கேற்ற கல் வித் திட்டத்தை வகுத்து நாட்டில் பிரசாரம் செய்து அமுலுக்குக் கொண்டுவரும் முயற்சியில் மேற்கூறிய பெரியோர்கள் முனைந்து நிற்கவேண்டும். பெண்கள் முன்னேற்றத் துறையில் நல்ல ஊழி யம் புரிந்துவரும் கற்றறிந்த பெண்மணிகளின் ஆலோசனைகளையும் தீர்மானங்களையும் எல்லாரும் அங்கீகரிக்க வேண்டும்.

இப்போது நமது நாட்டில் பெண் மக்கட்குப் போதிக்கப்படும் கல்விமுறை போதிய பலன் கொடுப்பதாயில்லை. உண்மையில் இது பெண்களுக்குரிய கல்வி முறையும் ஆகாது என்று கூடச் சொல்ல லாம். குடும்ப நிர்வாகத்தோடு ஓய்வு நேரங்களில் ஏதேனும் கைத் தொழில் மூலம் பொருள் வருவாய் ஏற்படும்படியான நிலைமை யிலும் பெண்கல்வி அமைய வேண்டும். அறிஞரும் அரசாங்கத் தாரும் பெண்மக்கள் நலத்தில் தீவிர கவனம் செலுத்தி வேண்டு வன செய்வார்கள் என்று எதிர்பார்க்கிறோம்.

ஓம் தத் ஸத்.

---



ஆரிய சித்தாந்தம்.

## உலக ஞானம்.

(சிவானந்தசாகர யோகீஸ்வரர்)

அந்த மீன் சொன்னதைக் கேட்ட வைவசுவத மனு அதைத் தமது கையில் எடுத்துக் கொண்டார். அதன் சரீரம் சந்திரனுடைய நிலவைப் போலப் பிரகாசித்தது. நீர் நிறைந்த ஒரு மண் பாண்டத்தில் அதை விட்டு வைத்தார். அது பெருத்தது. மனு அதைத் தன் சொந்தப் புத்திரனைப் போல வளர்த்தார். நெடு நாளைக்குப்பின் அது வளர்ந்துவிட்டபடியால் அந்த மண்பாண்டம் அதற்குப் போதவில்லை. அது மனுவை நோக்கி, மகிமை யுள்ளவரே! என்னை வேறோரிடத்தில் வையும் என்றது. மனு அதை ஒரு நீர் நிறைந்த குளத்தில் விட்டார்.

அந்தக் குளம் இரண்டு யோசனை நீளமும் ஒரு யோசனை அகலமும் உள்ளது. மீன் பெரிதாய்விட்டபடியால் அந்தக் குளமும் அதற்குப் போதாமற் போயிற்று. மீன் மனுவை நோக்கி "மகிமையுள்ளவரே! சமுத்திர ராஜனுக்குப் பிரிய பத்தினியான கங்கையில் என்னைக் கொண்டுபோய்விடும். உமது கருணையால் நான் மிகப் பெரிதாக வளர்ந்துவிட்டபடியால் நீர் என்ன கட்டளையிட்ட போதிலும் அதை மகிழ்ச்சியுடன் நிறைவேற்றுவேன்" என்றது. மனு அதைக் கங்கையில் கொண்டுபோய் விட்டார். சில நாளைக்குப் பின் மீன் மனுவை நோக்கி "இந்தக் கங்கை எனக்குப் போதவில்லை; என்னைக் கடலில் கொண்டுபோய்விடும்" என்றது. அவரும் அப்படியே அதைச் சமுத்திரத்தில் கொண்டுபோய் விட்டார். விட்டவுடன் அது அவரை நோக்கி "நீர் செய்யவேண்டுவதைச் சொல்லுகின்றேன் கேளும்" என்று சொல்கிறது.

"பெரியவரே! மஹானுபாவரே! இந்தச் சராசரப் பொருள்களெல்லாம் அழிந்துபோகிற காலம் வந்துவிட்டது. ஆகையால் உமக்கு நன்மையானதைச் சொல்கிறேன். ஒரு பெரிய பெட்டி பண்ணும்; அதில் நீளமான ஒரு கயிற்றைக் கட்டிவையும்; அதில் சப்த ரிஷிகளுடன் நீரும் ஏறிக்கொள்ளும்; எல்லாவகையான தானியங்களையும் எடுத்துக்கொள்ளும்; அதைத் தனியாக வைத்துக் காப்பாற்றும்; பிறகு நான் ஒரு கொம்புள்ள ஜந்துவாக உமக்கு முன்னால் வருவேன், அப்போது என்னைத் தெரிந்துகொள்ளும். பயங்கரமான பிரளயமுண்டாகும், அதில் என் உதவியில்லாமல் நீர் தப்பித்துக்கொள்ள முடியாது" என்று கூறிற்று. மனு மீனை நோக்கி "இறைவனே! நீர்

சொன்னவற்றில் நான் சந்தேகம் கொள்ளவில்லை. ஆகையால் நீர் சொன்ன படியே செய்வேன்'' என்றார். பிறகு இருவரும் பிரிந்து போய்விட்டார்கள்.

பிறகு மனு ஒரு கப்பல் செய்து அதில் சகல தானியங்களையும் ஏற்றிக் கொண்டு கடலில் சென்றார். மனு இப்போது அந்த மீனை நினைத்தார். அதை அறிந்த மீன் தலையில் இரண்டு கொம்புகளுடன் அவர் முன்னால் வந்தது. அதன் கொம்புகளில் மனு கயிற்றைக் கட்டினார். கட்டினதும் மீன் அந்தப் பெரிய பெட்டகையைப் பலமாக இழுத்தது. புயற்காற்று வீசிற்று. அப்போது பூமியின் திசை ஒன்றுந் தெரியவில்லை. எங்கே பார்த்தாலும் நீர் மயமாயிருந்தது. ஜலமானது பூமி ஆகாயம் இரண்டையும் மூடிக்கொண்டது. இப்படிப்பட்ட பெரிய வெள்ளத்தில் மனு சப்த ரிஷிகள் மீன் இவர்களைத் தவிர வேறொன்றும் காணப்படவேயில்லை. பல வருஷகாலம் வரைக்கும் மீன் கப்பலை இழுத்துக்கொண்டிருந்தது. கடைசியில் கப்பலை இமயமலையின் சிகரத்துக்கு இழுத்துக் கொண்டுவந்தது. பின் அந்த மீன் சப்த ரிஷிகளை நோக்கிச் சொல்லுகிறது.

"தாமதம் பண்ணாமல் இந்தக்கப்பலை இந்தச் சிகரத்தில் கட்டுங்கள்'' என்றது. அவர்களும் அப்படியே கட்டினார்கள். அந்த நாள் இமய மலைச் சிகரம் நௌபூதானம் என்று கூறப்படுகிறது. மீன் சப்த ரிஷிகளை நோக்கி "சிருஷ்டிக் கர்த்தாவாகிய பிரம்மா முதல் எனக்கு மேற்பட்டவர் ஒருவருமில்லை. நானே மீன் வடிவங்கொண்டு இந்த ஆபத்தினின்றும் காப்பாற்றினேன். தேவர்கள், அசுரர்கள், மனிதர்களாகிய சகல சராசரங்களையும் மனு சிருஷ்டிப்பார். உக்கிரகமான தபசு செய்து மனு உலகத்தைச் சிருஷ்டிக்கும் சக்தியைப் பெறுவார். என்னுடைய அனுக்கிரகத்தால் மனுவை மாயை மறைக்காது'' என்று இப்படிச் சொல்லிவிட்டு ஒரு க்ஷணத்துக்குள் திடீரென்று மறைந்து போயிற்று. வைவசுவத மனுவும் உலகத்தைச் சிருஷ்டிக்க எண்ணங் கொண்டார்.

சிருஷ்டிக்கிறபோது மனுவை மாயை மறைத்துவிட்டது. ஆகையால் அவர் உக்கிரகமான தபசு செய்தார். தவத்தில் சித்திபெற்றபின் மனு சரியானபடி சிருஷ்டிக்கத் தொடங்கினார். இந்தக் கதைக்கு மீனோபாக்கியானம் என்று பேர். இதைச் சிரத்தையுடன் படிக்கிறவர்கள் எண்ணின எண்ணங்களெல்லாம் நிறைவேறும். சகல பாக்கியங்களையும் பெறுவார்கள். அந்தத்தில் சொர்க்கத்தையும் பெறுவார்கள்.

அரசன், "விதுரா! உலகத்தில் எவ்வகையான ஆசாரங்கள் அனுஷ்டிக்கப்படுகின்றன? அவை யாரால் உண்டாக்கப்பட்டன? அவற்றுள் சிறந்தது எது? தெய்வானுக்கிரகத்துக்குச் சரியான மார்க்கம் எது? இவைகளைச் சரியானபடி எனக்குச் சொல்லு. நீ எல்லாவற்றையும் அறிந்திருக்கிறாய். உன் வசனங்கள் கேட்பதற்கு இன்பமாயிருக்கின்றன. இந்த வம்சத்தில் நீ ஒருவனே சகல

சாஸ்திர இரகசியங்களையும் தெரிந்துகொண்டிருக்கிறாய்'' என்று கேட்க விதுரர் சொல்கிறார்.

சிரௌதம், ஸ்மார்த்தம், பௌராணம், சித்தாந்தம் என நால்வகையாய ஆசாரங்களுண்டு. அவற்றுள் முதற் கூறிய சிரௌத ஸ்மார்த்தங்களிரண்டும் சிரேஷ்ட முடையன. இவைகளையே எல்லா வைதிகர்களும் ஆசரிக்கின்றார்கள். சிரௌதம் என்பது வேத நெறி. வேதத்துக்குச் சுருதி என்று ஒரு பெயர் உண்டு. சுருதி என்றால் காதினால் கேட்கப்படுவது என்பது பொருள். அதாவது சுரோத்திரம் என்கிற காதுக்கு விஷயமாவது என்பது. வேதத்தை எழுதிப் படிப்பதில்லை. அது ஆசிரியன் வாயினாற் சொல்லிக் கொடுக்க காதால் கேட்டுப் பாடம் பண்ணப்படுவது. இதனால் வேதத்துக்கு எழுதா மறை என்று ஒரு பேர் கூறப்படும். ஏனென்றால் எழுதவும் சாத்தியப்படாது. அதற்கு ஸ்வரமே காரணமாம். இத்தகைய வேதத்திற்கு அநாதி ஸ்வயம்பு என்று நூல்களில் கூறப்படுகிறவரும் கர்த்தன் இல்லை. பிரம்மா, விஷ்ணு, ருத்திரர்களும் இதனை உண்டாக்கினவர்களில்லை. அதனாலேயே ஸ்வயம்பு என்பர். பரமேசுரன் இதை வெளிப்படுத்தினவர். அவரும் இதை உண்டாக்கினவரில்லை. சிவம் உள்ளபோதே இதுவும் உள்ளது. ஆதலால் அநாதியாம் என்பர். இதையே நாத பிரமம் என்பர். இது சிவத்துக்குச் சொரூபமாயுள்ளது. ஆதலால் இதற்குக் கர்த்தர் ஒருவருமில்லை. வேதம் என்பதற்கு அறிவு நூல் என்று அர்த்தம். இத்தகைய வேதநெறியாகிய ஆசாரமே சிறப்புடையது. யாகம், யக்ஞம், ஹோமம் முதலியவெல்லாம் சிரௌதமே. இதையே அந்தணர்கள் அனுஷ்டிக்கின்றார்கள்.

இரண்டாவது ஸ்மார்த்தம் என்பது ஸ்மிருதி நெறியாம். ஸ்மிருதி என்பது பிரமதேவர் மனு முதலியவர்கள் நெடுங்காலம் தவத்திலிருந்து சிந்தித்து, வேதப் பொருளைத் திரட்டிக் கூறியதேயாகும். ஸ்மிருதி என்பதற்கு நினைக்கப்பட்டது என்பது பொருள். ஸ்மிருதம் என்றால் நினைத்தல். வேதப் பொருள் நெடுங்காலம் சிந்தித்து எடுக்கப்பட்டது. இதுவும் வைதிகமேயாம். இந்த நெறியே எல்லாராலும் அனுஷ்டிக்கப்படுகின்றது. இந்த நெறிபற்றி ஒழுகுவோர் ஸ்மார்த்தர் என்று அழைக்கப்படுவார்கள். இந்த நெறி சிரௌதத்தைவிடச் சற்று எளிதானது.

மூன்றாவது பௌராணிகம். அது புராண நெறியாம். புராணங்களிலும் ஆசாரங்கள் கூறப்படுகின்றன. "இதிஹாஸ புராணாப்யாம் வேதார்த்தார்த்தப் பிரகாச்யதே'' என்ற வசனத்தால் புராணம் வேதாந்தப் பொருளாகிய ஞான காண்டத்துக்குச் சிறப்புடையதே யன்றிக் கர்மானுஷ்டானங்களுக்கு அவ்வளவு சிறப்புடையதல்லவென்பர். கர்மாசாரத்துக்கு ஸ்மிருதியே பிரமாணமுடையது. ஞானத்துக்குப் புராணம் பிரமாணமுள்ளது. ஆதலால் ஞானத்துக்கு ஸ்மிருதியும், கர்மத்துக்குப் புராணமும் பிரமாணமாவதில்லை. ஆயினும் சிலர் புராணாசாரம் பற்றி நடக்கிறார்கள். வைதிகர்கள் இந்நெறியைச் சிறப்பாகக்கொள்ளுகிறதில்லை. ஆயினும் வேதத்துக்கு மாறுபடாதிருப்பதை மாத்திரம் பிரமாணமாகக் கொள்வார். இதனால் வேத நெறியோடு மாறுபடாமல் இருக்கிறவைகளெல்லாம் பிரமாணமுள்ளனவாம். சிலரே இந்த ஆசாரம் பற்றி ஒழுகுகின்றார்கள். அவர்களும சிரௌத ஸ்மார்த்த நெறிகளை அலட்சியம் செய்வதில்லை. ஆதலால் சிரௌத ஸ்மார்த்தம் இரண்டும் மிக்க சிலாக்கியமான நெறிகளாம்.

# ஆனந்த சந்திரோதயம்

தமிழாசிரியர் S. V. வரதராஜையங்கார்.

"ராஜரிஷி ஜனகர்." ஒரு சமயம் ஜனக மகாராஜன் ஓர் பிராம்மணனிடம் மிகுந்த கோபங்கொண்டு அவனைத் தன் தேசத்திலிருந்து ஓடிப் போகும்படி கட்டளையிட்டான். அந்தப் பிராமணன் "ஐயா! ஜனக ராஜனே! உமது ஆக்ஞையின்படி நான் ஓடிப்போவதில் தடையில்லை. உமது ராஜ்யத்தின் எல்லை இன்னதென்று எனக்கு விளங்கவில்லை. சொன்னால் இந்தக் கணமே புறப்பட்டுச் சென்று விடுகின்றேன்" என்றான். ஜனக மகாராஜா யோசித்தார்; ஒன்றுந் தோன்றாமல் பிரமித்துக் கொஞ்ச நேரத்தில் மறுமொழி புகல வாரம்பித்தார். "ஐயா! முன்னோர்களிடமிருந்து வந்த ராஜ்யத்தை நான் இப்பொழுது ஆண்டுவந்தாலும் அது எனக்குச் சொந்தமென்று நான் எப்படிச் சொல்லுவேன்? என் முன்னோர்களாண்ட ராஜ்யத்தை அவர்கள் தங்களுக்குச் சொந்தமானதென்று சொல்லிக்கொண்டிருந்தார்கள். அது பொய்யாய்ப் போயிற்று. இந்த ராஜ்யம் உண்மையாகவே அவர்களுக்குச் சொந்தமானதாயிருந்தால் அவர்களிறந்துபோனவுடன், அதுவும் அழிந்துபோயிருக்க வேண்டும். அவ்விதம் அழிந்துபோகவில்லை. எனக்குப் பிற்காலம் இவ்விராஜ்யம் அழியாதென்பதும் நிச்சயம். ஆதலின் இந்நாடு எனக்குச் சொந்தமன்று. பூமிதேவி ஒரு சமயம் "என்னை எத்தனையோ அரசர்கள் ஆண்டு வந்தனர். எல்லோரும் என்னைத் தங்களுக்குச் சொந்தமென்று சொல்லிக்கொண்டிருந்தார்கள். அத்தனை பேர்களுமிறந்தனர். நான் மட்டும் அழியாமலிருக்கிறேன்" என்று சொல்லியிருக்கிறாள். ஆதலின் நான் எனக்குச் சொந்தமென்று சொல்லிக்கொள்ளும் இம்மிதிலை நாட்டை இதிலுள்ள ஜனங்களெல்லாம் துண்டு துண்டாகச் செய்து அவைகளைத் தங்களுக்குச் சொந்தமென்று சொல்லிக் கொள்ளுகிறார்கள். ஆதலின் மிதிலாநாடு எனக்குச் சொந்தமல்ல. என் பிள்ளைகள் வசிக்குமிடம் எனக்குச் சொந்தமோவென்று பார்த்தால் அதுவும் எனக்குச் சொந்தமல்ல. என் தேகத்தைப் பார்த்தாலோ இப்போது இரத்தத்திலுள்ள பூச்சிப் புழுக்கள் தங்களுக்குச் சொந்தமென்று சொல்லிக்கொள்ளுகின்றன. இறந்து போனால் நாயும் நரியும் தங்களுக்குச் சொந்தமென்று சண்டையிடுகின்றன. மேலும் நான் யாரென்றாலோ அதுவே சந்தேகத்தில் வந்துவிட்டது. நான் தேகமல்ல, சதையல்ல, இரத்தமல்ல, எலும்பல்ல, மனமல்ல, இந்திரியமல்ல. இவ்விதம் நிலைகெட்டுச் சொந்தமென்ற பதமின்றி அவதிப்படும் நான் உம்மை ஊரை விட்டோடும்படி கட்டளையிட்டது அறிவீனம். ஆதலின்

பிராமணா! நீர் உம்முடைய ஆயுட்காலம் முழுதும் உமக்கிஷ்டமானபடி இந்நகரதிலேயே இரும்" என்றான். இந்த ராஜரிஷியின் உபதேசத்தைக் கவனிப்பின் எவரும் அஹங்கரிப்பதற்குச் சற்றும் இடமில்லை.

"மாளா வாழ்கின்றயே" ஹே! பாழும் நெஞ்சே! நீ இறந்து படாமல் வீணாக வாழ்ந்திருக்கின்றாயே! என்றார் மாணிக்க வாசகப் பெருமான். மனம் மர்க்கட சுபாவ முடையது. தனது தன்மையை மறந்து தாழ்வான விஷயாந்தரங்களில் பிரவேசிக்கும் சுபாவ முடையது; தனது ஏவலாளராயிருக்கும் பஞ்சேந்திரியங்களை அடக்கி உண்மையான வழிகளில் புகுத்தாமல் வசந்த காலத்திற்குரிய மன்மதனது தாமரை மா அசோகு முல்லை நீலம் என்னும் பஞ்சபாணங்களின் பொருட்டாகவும், வெண்மை நிறமுள்ள பற்களையும் செந்நிறமுள்ள வாயையும் கரிய குவளை மலரை யொத்த கண்களையு முடையாரான மகளிர் பொருட்டாகவும் பதைத்துத் துடித்து இன்னல்களையே மதித்து உருகுமாறு விடும் கீழ்மையுடையது. மன்மதனுடைய மேற்கூறிய பஞ்ச பாணங்களால் மனிதன் சுப்ரயோகம் விப்ரயோகம் சோகம் மோகம் மரணம் என்னும் ஐந்து தூர் அவஸ்தைகளையும் அடைகின்றான். சுப்ரயோகத்தால் மாதரையும் அவர் அழகிய சொற்களையும் வடிவழகையும் கற்பனையென்னும் தனது நண்பனோடு கூடி ஆராய்கின்றான் மனிதன். விப்ரயோகத்தால் மகளிரின் நினைவு முதிர, அதனால் காதலென்னும் கற்றாழை மனதின்கண் முளைக்க, அம்மங்கையரைப் புல்லியணைய எண்ணி எண்ணி ஏக்க முற்று வெய்துயிர்ப் புண்டாகின்றது. தான் கருதிய காதலியைக் காணப் பெறாமையாலோ, அன்றி அடையப் பெறாமையாலோ காதல் கூர்ந்த தலைவனுக்குக் காமநோய் அதிகரித்து அவனைவாட்ட, வாட்டமுற்ற அவன் மனம் வெதும்பி உணவினிடம் துவேஷம் அதிகரிக்க அல்லற்படுகின்றான். இப்படிச் சோகித்த அவனுக்கு மோகம் மிகுந்தெழுகின்றது. இறைவன் வழிபாட்டால் மோனத்தை யடைய வேண்டிய மனிதன் மோகதாபங்கொண்டு அதன் பயனாக மயக்கத்தையும் பிதற்றுதலையும் மிகவடைந்து துயருறுகின்றான். இவ்வித அவஸ்தைகளை யனுபவித்த அவன் ஒருவேளை தான் கருதிய காதலியை யடையப் பெற்றாலும், அவள் சொல்லையே சிரஸாவகித்து, அவள் கட்டளைப்படி யொழுகி அவள் கூறுவதே மறையென மயங்கி, நங்கையின் அவாவினைப் பூர்த்தி செய்விக்க வேண்டுமென்ற சங்கற்பத்தால் நாய்போலலைந்து, பொருளாசை பிடித்து, புத்தி மயங்கி, புன்றொழிலிலும் ஈடுபட்டு, தன்மை மயனாக வேண்டியவன் புன்மை மயனாகிப் புலம்பி வீணே திரிந்து விழலுக் கிறைத்த நீர்போலே வாழ்ந்து மாள்கின்றான். அன்றி, கருதிய காதலியை யடையப்பெறாமற் போனாலோ இன்னும் பெருந்துயருழன்று உயிரிறும் நிலையை எய்துகின்றான். ஆதலின், விரும்பிய பெண்ணை யடையினும் துன்பம்; அடையாமற்போயினும் துன்பம்; இரண்டின் எல்லையும் மரணமே. அது பற்றியே உருகா மனதையும் உருக்கும் எம் மண்ணல் மாணிக்க

வாசகப் பெருமான் மனதை விளித்து "ஏ! நெஞ்சே! நீ இருப்பதினும் இறப்பதே மேல்! அடுத்துக் கெடுக்கும் பகைவர்போல் நீ எனக்கு நன்மையே பயப்பவன் போல் நடித்து படுகுழியி லழுத்துகின்றனையே! இனியேனும் உன் குறும்பை விடு! நலவழிப்படு! நீ அடைய வேண்டியது அல்லற்குரிய மாதரை யல்லவென்று அறி! ஆனந்தப் பிழம்பான ஐயன் ஐந்தெழுத்துப் பெரியன் என்பதைக் குறி! அதுவே சரி! இதைவிட நயமாய் உனக்கு நற்புத்தி கூறுவார் யார்?" என்று கூறுகின்றார். அஞ்செழுத்தானாகிய குஞ்சர முகத்தான் தாதையை வழிபடாத நெஞ்சு நஞ்சாய் மனிதனை மரண ஹேதுவான மார்க்கத்தில் புகுத்து மென்பதை நாம் அறியக்கடவோம்.

***

"ஆதலால் பிறவி வேண்டேன் அரங்கமா நகருளானே" என்றார் தொண்டரடிப் பொடி யாழ்வார். உலகத்தில் மானிட ஜன்மம் என்பது ஜன்மாந்தர நற்றவங்களாலே பெறக்கூடியது. அதை வருந்திப் பெற்றாலும் பிறந்தவுடன் சில நாட்களுக்குப் பின்பும், சில மாதங்களிலும் சில வருஷங்களிலும் இறப்பவர் பெரும்பான்மையரே யன்றி "ஶதாயு வை புருஷ:" (வேதநூற் பிராயம் நூறு) என்று வேதத்திற் கூறியுள்ளபடி நூறு வருஷமளவும் இருப்பவர் மிக்க அபூர்வமாகவே காணப் படுவார்கள். விதிவசமாய் அங்ஙனம் நூறு பிராயமளவும் வாழுந் தன்மையைப் பெற்றாலும், ஆராய்ந்து பார்க்குமிடத்து நொடிப்பொழுதும் நற்பொழுதாகக் கழிய வழியில்லை. சூர்யன் அஸ்தமித்து மறுபடி உதிக்குமளவும் உறங்குவது ஒரு நியமமாக வந்து விட்டபடியால் ஒரு தினத்திற்குள்ள அறுபது நாழிகையில் முப்பது நாழிகை நித்திரையில் கழிகின்ற கணக்குப்படி ஒரு ஆயுளில் பாதியாகிய ஐம்பதாண்டுகள் நித்திரையில் கழிந்து போகின்றது. தாயின் சேயாய் யிருக்கும் சிசு அவஸ்தையில் சிலகாலமும், எத்தனை தீம்புகள் செய்தாலும் கோபித்துக் கண்டிக்க வொண்ணாதபடி செல்வப்பிள்ளைப் பருவத்திற் சில காலமும் கழிகின்றது. இந்த இரண்டையும் ஒருவாறு அறியாமை என்று ஒதுக்கி விட்டாலும் விடலாம். இவற்றிற்கு அடுத்தது ஒன்று இருக்கிறது; மிக்க பயங்கரமானது. அதன் பெயரைச் சொல்லவும் ஆழ்வார் நாகூசுகின்றார். ஏன்? துஷ்டன் பெயரை நாக்கொண்டு சொல்லக் கூசுபவர் 'அந்தப்பயல்' என்று சொல்லுவது போல ஆழ்வார் 'அது ஆகும்' என்கிறார். அது என்பது எது? அதுதான் யௌவனம்! அதுதான் விஷயாந்தரங்களிலே மனம் மண்டித் திரியும் பருவம். இந்திரியச் சிறையில் அகப்பட்டுத் தடுமாறி நிற்க இடிவிழுந்தது போல வருகின்ற கிழத்தனத்தால் சில காலம் கழிக்க வேண்டி யிருக்கின்றது. யௌவனத்திற் செய்த எல்லையில்லாத குறும்புகட்குப் பலனாக எய்தும் பிணிகளால் கொஞ்ச காலம் வருந்த வேண்டி யிருக்கின்றது. வறுமையாலும் பசியாலும் வாடுகின்ற காலம் சிலவாகவும், ஒருபுறம் பிள்ளை இறந்தான், மனைவி இறந்தாள் என்று

பலபடி கேட்டுத் துக்கப்பட்டு அழுது சோர்வதுமாகச் சில காலமும், இந்த சம்சார அவஸ்தையோடு இன்னும் நேரக்கூடிய இடர் பலவாகப் புண்ய வசத்தாற் கிடைத்த இம்மானிடப் பிறவி வீணாகக் கழிந்து போகின்றது. இன்ப மனுபவிக்க எண்ணிலோ இன்னும் கொஞ்சம் ஆயுளை நீட்டிவைக்கக் கடன் வாங்கவேண்டியதே. ஆதலின் இன்பமுண்டோ? ஆத்ம விசாரம் செய்யச் சிறிதாகிலும் பொழுதுண்டோ? இல்லை! இல்லை! ஆதலாற்றான் ஆராய்ந்து பார்த்த பிறரும் "என் செய்வான் தோன்றினேனே" என்கிறார். மானுட ஜன்மத்தினும் சிறந்ததில்லை யென்று சொல்லிவிட்டு அதற்கும் இத்துணை துன்பங்க ளென்று கூறுவீராயின் பிறகு நான் என்னதான் செய்வேன்? என்றால்— "யார் எப்படியானால் நமக்கென்ன? பெற்ற இப்பிறவியிலேயே நீ உய்யும் வழியைத் தேடு. இவ்வளவு தூரம் உனக்குக் கூறுவது நீ இப்பிறவியின் அருமையை யறிந்து பகவந்நாம வைபவத்தால் ஈடேற வேண்டுமென்ற எண்ணத்தாலேதான்" என்பது இதன் தாத்பர்யம்.

***

"உலகம் மெய்யா? அல்லது பொய்யா?" என்பது ஒரு பெருங் கேள்வி. சத்யமான ஆத்மதாபமுடைய பெரியோர்கள் இதை ஒரு பெரிய கேள்வி யென்று கருதமாட்டார்கள். உலகம் பொய்யானாலென்ன? உண்மையானால் தான் என்ன? அதை யறிவதால் நமக்கு உண்டாகும் ஊதியம் ஒன்றுமில்லை. உலகில் சுக துக்கங்களிருக்கின்றன வென்பதை எல்லோரும் ஒப்புக்கொள்ளுகிறார்கள். ஆதலால், சுக துக்கங்களை யொழித்து நித்தியானந்தத்தை யடைய வேண்டுமானால் உலக ஆசைகளைத் துறப்பது நன்று, நிலையற்ற இன்ப துன்பங்களை மறந்து நித்யமான இன்பத்தை யடையவேண்டுமென்ற விஷயம் மனதிற்குப் பிடிபடுகிறபொழுது உலகம் மெய்யானாலென்ன? பொய்யானாலென்ன? புத்திமான் ஆத்மவிசாரம் செய்யவேண்டும். ஆத்மா இன்னதென்றும் அநாத்மா இன்னதென்றும் அறிந்துகொள்ள வேண்டும். 'நான்' என்பது இந்த சரீரத்தைக் குறிக்கவில்லை யென்றும், ஆத்மாவையே குறிப்பிடுகின்றதென்றும் உணர்ந்து அநாத்மாவாகிய தேகத்தில் அபிமானம் கொள்ளாமல் ஆத்மாவின் தன்மையை விசாரிக்கவேண்டும். ஆத்மா அழிவில்லாதது என்பதை ஏற்றுக்கொள்ளாத மதஸ்தர் எவருமில்லை. கடவுள் உண்டா? என்றால் சிலர் இல்லை யென்று நாஸ்திகவாதம் செய்வார்கள். உலகம் உண்டா? என்றால் சிலர் இல்லை யென்று தர்க்கம் செய்வர். பிரம்மம் உண்டோ? என்றால் சிலர் அதைக் கண்டது யாரென்று மறுப்பர். ஆனால் எந்த மனிதனும் தானுண்டா? என்பதைப்பற்றிச் சந்தேகிப்பதே கிடையாது. ஆதலின் எது நிச்சயமானதென்று ஒவ்வொருவனும் நம்புகிறானோ அதைப்பற்றி முதலில் ஆராயத் தொடங்கட்டும் என்று ஸ்ரீசங்கரர் அருளிச் செய்துள்ளார். இவ்வாறு தனக்குள்ளிருக்கும் ஆத்மாவின் சொரூபத்தைப் பற்றி விசாரம் பண்ணத் தொடங்குகிறவன் வேதாந்தியாகித் தன்னுடைய ஆத்மாவே அதாவது தானே எங்கும் வியாபித்திருக்கும் பிரம்மமென்று நன்கறிந்து கொள்ளுகிறான். அதனால் ஆத்மாக்களிடத்தில் அவனுக்கு காருண்யம்— அன்பு உண்டாகிறது. அன்பென்னும் ஆற்றின் வழியே செல்பவன் ஆனந்தமென்னும் சமுத்திரத்தை யடைகிறான்.

***

'உலகம் பொய்யா? மெய்யா?' என்பதைப்பற்றி அத்வைதிகள் உலகத்தைப் பொய் யென்றும் சொல்வதில்லை; மெய் யென்றும் கூறுகிறதில்லை.

அத்வைத மதஸ்தாபகரான ஆதிசங்கரர் உலகம் பொய்யும் மெய்யும் கலந்ததென்கிறார். அங்ஙனம் பொய்யும் மெய்யும் கலந்த ஒரு வஸ்து உண்டா? எனில் உண்டு. நமது தேகத்திலிருக்கும் நகமும் மயிரும் தேகத்தைச் சேர்ந்தவைகளாயுமிருக்கின்றன. சேராதவைகளாயு மிருக்கின்றன. நகத்தையும் மயிரையும் தேகத்திலிருந்து சிறிது சிவிஞல் வலி உண்டாகிறதில்லை. ஆனால் நகத்தைச் சதையினின்றும் முற்றிலும் பிரிக்க முயற்சித்தால் உபத்திரமுண்டாகிறது. 'நகமும் சதையும் போல' என்று உலகத்தில் ஓர் பழமொழி வழங்குவதையும் நாம் கேட்கின்றோம். ஆதலின் நகம் தேகத்தில் சம்பந்தப்பட்டதாயும் படாததாயும் இருக்கின்றது. உண்மையில் தேகமும் நகமும் மயிரும் வெவ்வேறாயினும் நகமும் மயிரும் தேகத்தினின்றே முளைக்கின்றன. அதனால் அவை சரீரத்திலிருந்து உண்டானவை என்று சொல்லத் தடையில்லை. இது பற்றியே அத்வைதிகள் உலகம் பொய்யும் மெய்யும் கலந்ததென்று கூறுகின்றனர்.



"பெண்டிரை நடத்தும் விதம்" மனிதனுக்கு உரிய போகங்கள் எட்டு வகைப்படும். அவற்றுள் பெண் போகமொன்று. எந்த பொருளால் நாம் இன்பத்தை யடைகிறோமோ அதை நன்கு பாதுகாக்க வேண்டியது நமது கடமையாகும். ஒவ்வொரு மனிதனும் தன் மனைவியின் வாயிலாக போகத்தை யடைவதுடன் இல்லறத்தையும் நடத்துகிறபடியால் அவளிடம் என்றும் நிலையான அன்புகொள்ள வேண்டியது மிக்க அவசியமாகும். ஒரு சமயம் அவளிடம் மிக்க அன்புடன் நடப்பதும் மற்றொரு சமயம் அடியோ தண்டமாக வடித்துப் பிண்டம் பிடிப்பதும் ஒழுங்கான தல்ல. எப்பொழுதும் ஒரே விதமாய்-மிதமாய் நடந்துகொள்ளப் பிரயத்தனப்படுவதே மேலானதாகும். இதனால் ஸ்திரீகள் குற்றஞ் செய்யாதவர்களென்று நான் கூற முன்வரவில்லை. பிழைசெய்தல் மனிதப் பிறவியெய்திய ஒவ்வொருவருக்கும் இயல்பு. குற்றமே செய்யாத ஆடவனும் ஸ்திரீயும் உலகத்திலில்லை. குற்றஞ் செய்வது ஒவ்வொருவருடைய விவேகத்தையும் அனுபவத்தையும் பொறுத்திருக்கிறது. ஆகையால், புருஷன் தான் மட்டும் குற்றஞ் செய்யாதவனென்று கருதி தன் மனைவியைப் பிழை செய்தாளென்று நினைத்து அவளைத் தண்டிக்க முயல்வது தருமமாகாது. தான் கௌரவமாக நடந்துகொள்வதாலும் பொறுமையாலும் தன்னை மனைவி மதித்து பயந்து நடந்து கொள்ளும்படி செய்பவனே புத்திசாலி யாவான். அப்படியும் ஒரு ஸ்திரீ குற்றஞ் செய்பவளாகக் காணப்படின் நயமாக அவளைத் திருத்த முற்பட வேண்டும். அதனாலும் பயன் ஏற்படாவிடில் அவளை விட்டு விலகி இருப்பதே மேல். கோபத்தால் சிற்சில சமயங்களில் தன்னை மறந்து மிருதுவான சரீரமுடைய ஸ்திரீகளைத் தன் முழு பலத்தையும் உபயோகித்து அடித்து இம்சித்து அவள் உயிருக்கு துன்பமேற்படச் செய்து, பாபத்தை சம்பாதித்துக் கொள்வதுடன் ராஜ தண்டனைக்கும் ஆளாகின்றான் மனிதன். ஒரு விதத்திலும் நமக்குக் கட்டுப்பாடாக நடவாத மனைவியை என்ன செய்வது? என்று சிலர் வினவலாம். அவர்கள் "பத்தாவிற் கேற்ற பதிவிரதை யுண்டானால் எத்தாலுங் கூடி யிருக்கலாம், சற்றேறனும் ஏறுமாறாக இருப்பாளே யாமாயிற் கூறாமற் சன்யாசங் கொள்" என்பதை கவனிப்பார்களாக. சந்நியாசங் கொள்ள முடியாவிட்டால்—வேறொரு தக்க மனைவியைத் தேர்ந்து மணம் புரிந்து கொள்வது மிகவும் உத்தமமானது.

# தமிழ் இலக்கிய அபிவிருத்தி

(o)

## சுதந்தரத்தின் அவசியம்.

(பொ. திருகூடசுந்தரம் பிள்ளை, எம். ஏ. பி. எல்.)

### சுதந்திர தேவியின் துதி.

*தேவி நின் ஒளி பெறாத*
*தேயமோர் தேய மாமோ?*
*ஆவியங் குண்டோ? செம்மை*
*அறிவுண்டோ? ஆக்கமுண்டோ?*
*காவிய நூல்கள் ஞானக்*
*கலைகள் வேதங்க ளுண்டோ?*
*பாவிய ரன்றோ நின்றன்*
*பாலனம் படைத்தி லாதார்?* (பாரதி)

ஒரு தேசத்தின் ராஜீய சுதந்திரத்திற்கும், அத்தேசத்தின் பாஷாபி விருத்திக்கும், இலக்கிய சிருஷ்டிக்கும் இணை பிரிக்க இயலாத நெருங்கிய சம்பந்தம் உண்டென்பது அகில லோகத்திலுள்ள அறிஞர் அனைவரும் ஒப்புக்கொண்ட உண்மையாகும். ஒரு தேசத்தின் இலக்கியம் அத்தேசத்தில் வாழும் ஜனசமூகத்தின் அகவாழ்வை அழகிய முறைகளில் அறிவிப்பதாகும். ஆகையால் தேசீய அகவாழ்வின் நிறைவுக்குத் தக்கவாறே அதன் இலக்கியச் செல்வமும் அமையும். அகவாழ்வு நிறைந்ததா யிருக்கவேண்டுமாயின் அந்த ஜனசமூகம் ராஜீய சுதந்திரம் பெற்றதா யிருக்கவேண்டும். சுதந்திரமில்லாத தேசத்தில் எந்த விதத்திலும் ஜாதீய அபிவிருத்தி காணமுடியாது. அடிமைக் குழியில் ஆழ்ந்து அல்லலுறும் நாட்டில் ஜனங்களின் யாக்கையும் ஆன்மாவும் கட்டுண்டு கிடக்கும். அவர்கள் கருத்தெல்லாம் அல்லும் பகலும் ஆகாரமின்றி ஆவி துறவாதிருக்க அத்தியாவசியமான உபாயம் தேடுவதிலேயே அமைந்திருக்கும். 'உணவு' 'உணவு' என்று ஓயாது உழன்று கவலையுறும் ஜாதியாருக்கு உயர்ந்த இலக்கியத்தைச் சிருஷ்டிப்பதற்கும் அனுபவிப்பதற்கும் நேரம் ஏது?

### அடிமை நாட்டில் தோன்றும் நூல்கள்

ஆங்கில ஆசிரியர்களில் தலைசிறந்தவருள் ஒருவரான டிக்குன்வஸி என்பவர் இலக்கியத்தை இருவகையாகப் பிரிப்பர். அவையாவன அறிவு நூல்கள்,

ஆற்றல் நூல்கள் என்பன. கணிதம், வைத்தியம், சோதிடம் முதலிய விஷயங்கள் சம்பந்தமான நூல்கள் அறிவு நூல்களாகும். காவியம், நாடகம், நாவல் முதலியன ஆற்றல் நூல்களாகும். அறிவு நூல்கள், ஆற்றல் நூல்கள் ஆகிய இரண்டு வகையோடு சாமர்த்திய நூல்கள் என்று மூன்றாவது வகையொன்றையும் சேர்க்கலாம். இச்சாமர்த்திய நூல்கள் அறிவு நூல்கள் ஆகா; ஆனால் ஆற்றல் நூல்கள் என்று அறியாதார் மயங்கும் வண்ணம் இயற்றப்பட்டிருக்கும். காரிகை கற்றுக் கவிச்சுவையறியாது செய்யப்படும் செய்யுள் நூல்களே சாமர்த்திய நூல்கள் வகையில் சேரும். தமிழ்ப் பாகவதத்தில் காணப்படும் ராம சரிதைச் செய்யுள்களுக்கும் கம்பர் பெருமான் செய்துள்ள ராமாயணக் கவிகளுக்கும் உள்ள உண்மை வித்தியாசத்தை அறிந்தோர் சாமர்த்திய நூல்களுக்கும் ஆற்றல் நூல்களுக்கும் உள்ள வேறுபாட்டைத் தெரிந்தோராவர். இம்மூவகை இலக்கியங்களிலும் உண்மையாகவே "இலக்கியம்" என்னும் சிறப்புப் பெயருக்குத் தகுதியுடையன ஆற்றல் நூல்களேயாகும். அவைகள் தாம் உண்மையில் அவை தோன்றியுள்ள நாட்டின், ஜனசமூகத்தின் வாழ்வின் பல அம்சங்களையும் அழகு முறைகளில் அமைத்து அறிவிப்பதாகும். அத்தகைய ஆற்றல் நூல்கள் அடிமையின்றிச் சுதந்திரக் காற்று வீசும் தேசத்திலேயே மலிர்ந்து தோன்றும். ஆகையால் எங்கே ஜனங்கள் பிறநாட்டார் ஆட்சியின்கீழ் வாழ்கின்றனரோ அங்கே ஆற்றல் நூல்கள் உண்டாக்கப்படுவதில்லை. அங்கே தோன்றுவதெல்லாம் அறிவு நூல்களும் சாமர்த்திய நூல்களுமே.

## ஆற்றல் நூல்கள் எப்பொழுது தோன்றும்?

எங்கே சுதந்திரமில்லையோ அங்கே உண்மை விளக்கமில்லை. எங்கே உண்மை விளக்கமில்லையோ அங்கே ஆநந்தம் அமைவதில்லை. ஏனெனில் "சத்யமே ஆநந்தம்." இலக்கியம் என்பது ஆன்மாவின் ஆநந்த உணர்ச்சியின் மலர்ச்சியன்றோ? ஆனந்த உணர்ச்சியில்லாத அடிமைநாட்டில்—துன்பக் கேணியில் விழுந்து துடிக்கும் தேசத்தில் இலக்கியம் எழுவது எங்ஙனம்? ராஜீய சுதந்திர மிழந்த நாட்டில் இலக்கியம் எப்பொழுதேனும் தோன்றுவதாயிருந்தால் அவ் விலக்கியம் உண்மையின் விளக்கமாகாது, உண்மையின் தேட்டமாகவே இருக்கும்; சுதந்திர மலர்ச்சியாகாது, சுதந்திரத்திலுள்ள பேரவாவைத் தெரிவிப்பதாகவே இருக்கும். அங்ஙனம் அடிமை வாழ்வில் உள்ள அடங்கா வெறுப்பையும், சுதந்தர வாழ்வில் உள்ள சொல்லொணு விருப்பையும் தெரிவிக்கக் கூடிய இலக்கிய மறுமலர்ச்சியும் தேச பக்த சிகாமணிகளில் சிலரேனும் தேச மகாஜனங்களின் உள்ளத்தில் உறங்கிக் கிடக்கும் சுதந்திர உணர்ச்சியைத் தட்டி எழுப்பும்பொழுதே தோன்றுவதாகும். தேசிய உணர்ச்சி தோன்றினால் இலக்கிய சிருஷ்டியும் உடன் தோன்றிப் பெருகிவிடும். தேசிய இலக்கியங்கள் தோன்றவே அவைகளுக்குக் காரணமான தேசிய சுதந்திர உணர்ச்சியும் நாளொரு மேனியும் பொழுதொரு

வண்ணமுமாக வளர்ந்து பெருகும். அதனால்தான் சென்ற நூற்றாண்டில் ஐரோப்பா முழுவதும் தீர்க்கதரிசி யெனக் கீர்த்தி பெற்றவரும், இத்தாலி நாட்டின் சுயராஜ்ய ஸ்தாபனத்திற்கு அஸ்திவாரம் நிறுவியவரும், இந்தியர் அனைவரும் இடைவிடாது கற்றறியவேண்டிய இணையற்ற பலநூல்கள் இயற்றியுள்ளவருமான மாஜினி என்னும் மகான்,

> ஒரு தேசத்தின் ராஜீய வாழ்விற்கும் அதன் இலக்கிய வளர்ச்சிக்கும் மிக நெருங்கிய சம்பந்தம் உளது. அதனால் ஒன்றைவிட்டு ஒன்று முன்னேற்றம் அடைதல் என்பது ஒருபொழுதும் முடியாத காரியமாகும்

என்று கூறியிருக்கின்றனர். ஆகவே அடிமை நாட்டில் ஆற்றல் நூல்கள் தோன்றுவது அரிது. தோன்றினால் அவை ஜனங்களின் அபிலாஷைகளைக் காட்டுவதாகவும், அவர்களை அடிமை மோகத்தினின்று விடுவித்து சுதந்திரப் பாதையில் செலுத்துவதாகவும் இருக்கும். தேசபக்தி யூட்டி ராஜீய விஷயங்களில் ஜனங்களுக்குச் சேவை செய்யத்தூண்டாத நூல்கள் உண்மை இலக்கியங்கள் ஆகா என்பது மாஜினியின் அபிப்பிராயம்.

## தமிழ் இலக்கிய வளர்ச்சி

சென்ற இரண்டு நூற்றாண்டுகளாக இந்தியா தேசம் பிரிட்டிஷ் ஆட்சியின் கீழ் அடிமை வாழ்வு வாழ்ந்துவருகின்றது. அக்காலத்தில் தமிழ்நாட்டில் தோன்றியுள்ள நூல்களை ஆராய்ந்தால் மேற்கூறிய உண்மைகள் நன்கு புலனாகும். தமிழ் நூல்கள் ஏராளமாக இடையீடின்றி இயற்றப்பட்டு வருவது உண்மையே. ஆனால் சமீப காலத்தில் தோன்றியுள்ள தேசீய உணர்ச்சியின் காரணமாகத்தான் உண்மை இலக்கிய வகுப்பைச்சேர்ந்த நூல்கள் இரண்டொன்றுதோன்றிவந்திருக்கின்றன என்பதும் உண்மையாகும். சென்ற இரண்டு நூற்றாண்டுகளில் இயற்றப்பட்டுள்ள அந்தாதிகள், கலம்பகங்கள், பிள்ளைத் தமிழ்கள், ஸ்தலபுராணங்கள் முதலியவைகள் எல்லாம் சாமர்த்திய இலக்கிய வகுப்பைச் சேர்ந்தவைகளே யாகும். ஆசிரியர் சுந்தரம் பிள்ளை ஆக்கியுள்ள மனோன்மணியம் என்னும் நாடகம்கூட உண்மை இலக்கிய வகுப்பைச் சேர்ந்ததாகாது. அதில் காணப்படும் கவிகட்கும் சாமர்த்தியம் மிக உயர்ந்ததே என்பது உண்மை. ஆனால் அக்கவிகளில் அமைந்துள்ள "ஆற்றல்" மிக அற்பமே யாகும். பிரிட்டிஷ் அரசாட்சியின் "நன்மை"களை எடுத்தோதி பிரிட்டிஷ் அரசாங்கத்தைப் புகழும் தமிழ் நூல்களைப் பேசாது விடுத்தலே நலம். பிரிட்டிஷ் அரசாட்சிக் காலத்தில் தோன்றும் உயர்ந்த கல்வி ஞானம் காட்டும் உரை நூல்களுக்கும், உரை நூல்களின் பதிப்புக்களுக்கும் கணக்கில்லை. ஆனால் உண்மைக் கவிச்சுவை ஆராய்ச்சி மட்டும் காணக் கிடைப்பதில்லை. தமிழில் கவிச்சுவை ஆராய்ச்சி செய்வதாய்க் கூறுவோர் எண்ணெய் ஆட்டும் செக்கு மாடுகள்போல் பழைய தமிழ் நூல்களைச் சுற்றி

வருவதிலேயே காலங்கழிக்கின்றனர். இலக்கியச் சுவையின் இலக்கணத்தைத் அறிந்துகொள்வதற்கு ஏதுவாயுள்ள பலநாட்டுப் பெருங் காவியங்களேயும் இதர இலக்கியங்களேயும் ஆராயவேண்டும் என்ற எண்ணம் எள்ளளவும் அவர்களுக்கு இல்லே. இத்தகைய மனோபாவமும் நாட்டின் சுதந்திரமின்மையின் பயனேயாகும்.

## இலக்கிய மறுமலர்ச்சி

சென்ற ஐம்பது வருஷங்களாக நாட்டில் தேசிய உணர்ச்சி சிறிது சிறிதாகவேனும் அரும்ப ஆரம்பித்திருக்கின்றது. அதன்பயனுக அங்கங்கேயுள்ள சுதேச பாஷைகளில் இலக்கிய வளர்ச்சியும் ஏற்படுவதாய் இருந்து வருகின்றது. அங்ஙனம் தோன்றிவரும் நவீன இலக்கியங்கள் ஜனங்கள் அடிமைவாழ்வைச் சித்திரித்துக் காட்டுகின்றன. படிப்போர் மனத்தில் சுதந்திர தாகத்தை எழுப்புகின்றன. அத்தகைய உண்மை இலக்கியங்கள் ஆக்கியருளியுள்ளவர்களில் தலேசிறந்தவர் உருதுபாஷையில் இக்பால், வங்காளி பாஷையில் தாகூர், மலேயாள பாஷையில் வல்லத்தோல், தமிழ்பாஷையில் பாரதியார் ஆவர். அவர்களுக்கு ஜனங்கள் என்றும் கடமைப்பட்டவராவர். சுப்பிரமணிய பாரதியாரின் பாடல்களில் இரண்டொன்றைப் படித்துப் பாருங்கள். உண்மைக் கவிச்சுவை கம்பரின் ராமாயணம், புகழேந்தியின் நளவெண்பா, இளங்கோவின் சிலப்பதிகாரம் முதலிய நூல்களில் விளங்குவதுபோல விளங்குவதையும், படிப்போர் உள்ளத்தில் ஒருவகை ஆனந்தமும் உற்சாகமும் தோன்றுவதையும் காண்பீர்கள்.

## தமிழர் கடன்

இக்காலத்தில் தமிழ் மொழியில் இலக்கியங்கள் என்று கூறக்கூடிய உண்மை நூல்கள் வெகு வெகு சிலவே. உண்மை இலக்கியங்கள் நாட்டில் சுதந்தரம் ஏற்பட்டால்தான் உண்டாகும். சுதந்தரம் ஏற்படுமுன் உண்டாக்க விரும்புவர் சுதந்திரதாகம் நிறைந்தவராய், சுவாமி விவேகானந்தர் கூறியபடி அல்லும் பகலும் நாட்டின் நிலேமையிலேயே நெஞ்சு செலுத்தியவராய், ஏழைகள்பால் இரக்கம் ததும்பியவராய் இருத்தல் வேண்டும். அங்ஙனம் உள்ளத்தில் அடிமை வெறுப்பும் சுதந்திர விருப்பும் உண்டாக வேண்டுமானுல், அவைகளின் பலனுக உண்மை இலக்கியங்கள் உற்பத்தியாக வேண்டுமானுல் ராஜீய வாழ்வில் கலந்துகொள்ள வேண்டும். சுதந்தர இயக்கத்தில் சேர்ந்து உழைத்தல் வேண்டும். தாய்நாட்டின் விடுதலேயே தமிழின் விடுதலே யாதலால் தமிழர் அனைவரும் தாய்நாட்டின் விடுதலேக்கு உழைப்பதில் சலியாதிருப்பாராக.

வந்தே மாதரம்.

# திருநாவுக்கரசு சுவாமிகள் மாட்சி

:(o):

ஒரு தமிழாசிரியர்.

(88-ம் பக்கத் தொடர்ச்சி)

இவ்வாறிருக்கையில் மல மறைப்பால் மூன்றவத்தைப் படுகின்ற வுயிர் கட்குச் சருவ வியாபகனாகிய சிவனே அதன் பலன்களைக் கொடுப்பவனாதலால் மருள் நீக்கியார் சகல சாத்திரங்களையும் செவ்வையாக வோதி யுணர்ந்தும் முத்தியடைதற்குரிய நெறியைச் சிவபெருமான் உணர்த்தாமையாலே பாடலி புத்திரமென்னும் பதிக்குப்போய்ச் சமணர்களது பள்ளியடைந்து அவர்க ளுடைய நூல்களையுங் கற்றுத் தேர்ந்து அவர்களுக் கெல்லாம் ஆசிரியனாகித் தருமசேனன் என்னும் பட்டப்பெயரை அவர்கள் கொடுக்கப் பெற்று வாழ்ந்து வந்தனர். இஃது இங்ஙனமிருக்க எவர்களாலுங் காண்பதற் கரிய சிவனைக் கர்த்தாவாகக் கொள்ளாத சமயங்களிலே நின்று தடுமாற்ற மடை யாத இவரது தமக்கையாராகிய திலதவதியார் சிவதன்மத்தாலும், சிவயோகத் தாலும், சிவ ஞானத்தாலும் சிவனைக் கூடும்படிக் கருதுவோர்கள், தங்கள் செய்கைகளெல்லாம் தம்முடையதல்ல சிவனுடைய தென்றே கருதுவார்க ளென்பதும், அவர்களுக்கே சிவன் அருளுவா னென்பதும், செவ்வையாக வறிந்து சிவனையே போற்றி வருவார். இங்ஙனம் போற்றிவரும் அம்மை யார் திருவதிகை வீரட்டான மென்னும் ஆலயத்தி லெழுந்தருளிய சிவபெரு மானை நோக்கித் தன் தம்பியின் செய்கைகளைச் சொல்லி வருந்தினர். அப் போது சிவபெருமான் திலதவதியாரை நோக்கி "நீ யொன்றுக்கும் வருந் தாதே; அவன் நமக்குச் சிறந்த தொண்டன். அற்பக் குற்றத்தினால் சமண மதத்திலே சேரும்படி நேர்ந்தது. அவனை நாம் சூலை நோயைக் கொடுத்துத் தடுத்தாட்கொள்வோம்" என்றனர்.

பின்னர் சிவபெருமான் திருவருளினாலே தரும சேனருக்குச் சூலை நோய் அதிகரித்துக் குடலை முடுக்கித் துன்புறச் செய்தது. அந்நோய்க்கு ஆற்றாராகித் தருமசேனர் தாம் கற்றுள்ள சமண சமய மந்திரங்களாலே தடுக்க முயன்றும் அந்நோய் மேன்மேலும் அதிகரித்துத் துன்புறுத்தியது. அது கண்ட சமணர்கள் யாவரும் தாம் தாம் கற்றுள்ள மந்திரங்களின் வன்மையினாலே மந்திரித்தும் அந்நோய் தணியாத தாகித் துன்புறுத்த மிகவும் வருந்தித் தருமசேனர் தன் தமக்கையாரை நினைந்து ஓர் பாகுகனை அனுப்பித் தம் சமாசாரத்தை அவருக்குத் தெரிவித்தார். அதற்கு அம்மை யார் மகாபாவிகளாகிய சமணர்கள் பள்ளிக்கு நான் வாரேன். என் சகோ தரனுக்கு இதை யுரையென்று பகர்ந்தாள்.

அதைக்கேட்ட பாகுகன் அவ்வம்மையார் கூறியதைச் சொல்லினன். சொல்லவுந் தருமசேனர் இதற்கு நானென்ன செய்வே னென்று வருந்தி

மனஞ்சோர்ந்து, பின்னர் இப்புன் சமயத்தில் ஒழியா இக்கொடிய நோய் என்னைவிட்டு நீங்கத் திலதவதியார் திருவடியை யடைவே னென்று நினைத்துச் சமண வேடத்தைப் போக்கி வஸ்திர மணிந்து தமக்குக் கைதருவார் சிலரைப் பற்றிக்கொண்டு சூலை நோய் மாத்திரந் தம்மைத் தொடர்ந்து வாத் திருவதிகை யடைந்து, திலதவதியார் திருமடத்துக்குப் போய் அவரைப் பணிந்து, "நம்குலஞ் செய்த நற்றவப் பயனே அடியேன் சூலை நோயால் மிகவும் வருந்திச் சகிக்க முடியாமல் இங்குச் சேர்ந்தேன்" இனி தாமதியாது அடியேன் உய்ந்தருளும் வழியைத் திருவாய் மலர்ந்தருள வேண்டும் என்றார்.

ஆகமங்களிலே கூறியபடி சிவாலயத்திலே திருவலகிடல், திருமெழுக்கு, திருவிளக்கு, திருநந்தவனம், திருபள்ளித் தாமம், திருமஞ்சனம், திருமாலை, திருக்கூத்து, பாட்டு முதலாயுள்ள தொழில்களும், திருவேடத்தாரை வழிபடுகையும், சிவபத்தருக்கு வேண்டுவன செய்கையும், திருமந்திரஞ் செபிக்கையுமாகிய தாத மார்க்கத்தையும், தேவாரத் திருவாசகங்களைப் பாராயணஞ் செய்தல், சிவனை மனம் வாக்குக் காயங்களா லொருமித்துப் போற்றுதல், முதலாகிய சற்புத்திர மார்க்கத்தையுங் கடைப் பிடித்து வருபவராயுள்ள அம்மையார் சிவபெருமானைப் போற்றிவரும் நெறியில் நின்றுந் தவறி, பரசமயக் குழியில் அறியாது வீழ்ந்து தடுமாறும் தம்பியாரே எழுந் திருமென் றருளிச் செய்தார். அம்மொழி கேட்ட தருமசேனர் சூலைநோயுடன் மயங்கி நடுங்கி யெழுந்து தமக்கையாரைத் தொழுதார். அருந்தவ சிகாமணியார் தம்பியாரை நோக்கி இது சிவபெருமானது திருவருளாகும். தம் கழலடைந்த மெய்யடியார்களது பற்றினைப் போக்கியாளும் அப்பரஞ் சோதிக்கே திருத்தொண்டு செய்யு மென்றார். மருள் நீக்கியார் அக்கட்டளையைச் சிரமேற்கொண்டார். அவ்வமயம் சைவ சிகாமணியாகிய திலதவதியார் திருப்பள்ளி யெழுச்சியில் திருவலகும், திருமெழுக்கும் திருத்தோண்டியுங் கைக்கொண்டு ஆலயத்திற்குத் தன் தம்பியாரை அழைத்துச் சென்றார். அப்போது அமண் பொய்மை உலகுக் குணர்த்திய மருள் நீக்கியார் வீரட்டானேசுவரர் திருக்கோயிலைத் தொழுது வலம் வந்து திருமுன் எழுந்து வணங்கி நின்றார்.

அச்சமயம் வீரட்டானேசுவரர் திருவருளால் அப்பெருமானுக்குத் தமிழ் மாலைச் சாத்தும் ஞான வுணர்ச்சித் தோன்றிற்று.

உண்டாகவே தம்மை வருத்தும் சூலைநோய் நீங்கவும், உலகமுய்யவும் திருப்பதிகம் பாடத் தொடங்கினர்.

திலதவதியாரீந்த திருநீற்றை யுடல் முழுதுந் தெரியச் சாத்தி
பல துயரம் போக்குகின்ற பரம சிவன் பாகீர்த்திப் பாரின் மீது
திலவிடவே பண் கொல் விதனைக் கொண்டே திருமலனூர் பாதப்போதாம்
சலசமலரிற் கூற்றாயின வென்றே தமிழ்ப்பதிகம் சாற்றுவாரால்.

திருச்சிற்றம்பலம்

கூற்றாயினவாறு விலக்க கில்லீர் கொடுமை பல செய்தன நானறியேன்
ஏற்றாயடிக்கே யிரவும் பகலும் பிரியாது வணங்குவ னெப்பொழுதும்
தோற்றாதென் வயிற்றி னகம்மடியே குடரோடு துடக்கி முடக்கியிட
ஆற்றே னடியேனதிகைக் கெடிலவீரட்டானத் துறையம் மானே.

(தொடரும்)

# சக்தி வணக்கத்தின் சிறப்பு

(கமலம்)

தெய்வத்தை வழிபடும் முறைகள் பலவாகக் கிடப்பினும், அவை எல்லாவற்றுள்ளும் மிகச் சிறந்ததாய் ஆன்றோரான் வியந்தோதப்பெற்றது அம்மை வணக்கம். என்னெனில் ஒருவர்க்குத் தன் தாயிடம் உண்டாகும் அத்துணை உயர்ந்த தூய அன்பு வேறொருவரிடத்து உண்டாவதரிது. ஒரு குழந்தை பிறந்தவுடன் அதன் வாயினின்றும் அது அறியாமல் கிளம்பும் சொல் 'அம்மா' என்பதுதான். அச் சிறு குழவிக்கு முதல் முதல் அன்பு தோன்றுவது அதன் அம்மையிடத்தேதான். தந்தைபாற் கொள்ளும் உறவு அதற்குப் பிற்பட்டதே. தந்தையிடம் கொண்டுள்ள வணக்கம், பணிவு, அச்சம் முதலிய குணங்களால் முழு அன்பின் வலிமை சிறிது மறைபடவுங்கூடும். ஆனால் தாயிடமோ அவ்வாறாய தடைகள் ஒன்றும் அன்பிற்கு நேருவதில்லை. தனது குற்றங்களையுங்கூடத் தன் தாயிடம் சிறுவன் ஒளிக்க முயலுவதில்லை. பொதுவாகத் தாயிடத்து ஒருவருக்குத் தோன்றும் அன்பின் முழுவேகமும் வேறிடத்துத் தோன்றுதல் அரிது.

மக்களன்பு இவ்வாறாகத் தாயினுடைய பேரன்போ இதனினும் உயர்ந்ததாய் அளவற்றதாய்த் திகழ்கின்றது. நமக்கு எத்துணை நெருங்கியவராயிருப்பினும், நமக்கு வாழ்க்கைத் துணை நலன் என்று கூறிக்கொள்ளும் மனைவியேயாயினும், அவர்களிடத்து ஒப்புயர்வற்ற தாயின் தலைமைத் தனி அன்பைக் காணுதல் இயலுமோ. எழுமூ கோடிப் பிறவிகளெடுத்து அவ்வெல்லாப் பிறவிகளையும் அவள் பணி செய்வதிலேயே கழிப்பினும், அவள் ஒரு நாள் வலிமையற்று நாம் குழவிப் பருவத்திருக்குங் காலையில் நமக்குப் பேரன்போடு செய்த உதவிக்கு ஈடு நிற்குமா? அருளும் அன்பும் இரண்டும் சேர்த்து உருக்கி வார்க்கப்பட்ட வீட்டுத் தெய்வமன்றோ அவள்? எல்லாம் துறந்த துறவியாரான பட்டினத்தடிகளையும் சிறிது நேரம் துறவு மார்க்கத்தினின்றும் அவர் நினைவை ஈர்த்துக்கொண்டது அவர் தம் தாயின் தலையன்பென்றால் அதன் தன்மையை யாம் என்னென்று கூறுவது? மக்களன்பேனும் வளர்ச்சி முகத்தான் மாறுபாடுற்றுப் பிறழ்ந்து போகலாம். ஆனல் நம்மைப் பெற்று வளர்த்த அருட்பெருந் தெய்வத் திருமகளின் அன்பு எவ்வாற்றானும் மாறுபாடுறாத அருள் ஊற்றன்றோ? இந்நில உலகத்து இறக்கும்வரை ஒரே படித்தாய் நிலை பேறுற்ற பேரன்பொன்றுளதாயின், அது தாயின் அன்பன்றி வேறில்லை.

அழியாத பேரன்பே கடவுளாகலானும், அதை அன்பன்றி வேறு எதனாலும் அடைய முடியாதாகையானும் அன்பிற்குப் பேரிலக்கணமாய் நிற்கும் 'அம்மை' என்ற முறையில் வைத்து அதை வணங்குதலே மிக்க உயர்ந்த தெய்வ வழிபாடாய் ஆன்றோர் கொண்டனர். மற்றும் இதனுள் கவனிக்கற்பாலதொன்றுண்டு. தெய்வ வழிபாட்டிற்கு இன்றியமையாது வேண்டப்படுவது கள்ளங் கபடற்ற உள்ளம். அது சிறு குழந்தைகளிடத்தன்றி வயது வந்தவர்களிடம் காண்டல் அரிது. தாய்க்கும் பிள்ளைக்கு முள்ள தொடர்பின் தூய்மை வேறு தொடர்புகளிலில்லை. ஆகலான் அம்மை வழிபாட்டால் இரண்டு பெரும் நறுங் குணங்கள் நம்மால் நிலையுறுகின்றன. அவைதான்

அன்பும் தூய்மையுமாம். இக் குணங்கள் கைவரப்பெற்றால் நமக்கு வீட்டின்பம் தானே எளிதிற் கிடைக்கும். இவற்றைச் சிறிது விளங்கக் கூறுவாம்.

கடவுள் அன்பு மயமானவர். சிவம் என்ற சொற்கு அன்பு என்றே பொருள். 'அன்பே சிவம்' என்றார் நம் திருமூலர். 'ஈறிலாப் பதங்கள் யாவையுங் கடந்த இன்பமே என்னுடை யன்பே' என்றார் மணிவாசகரும். இவ்வன்புதான் சிவம், மால், பரை, வேலன், என்று பல்லாற்றான் பல்லோரால் வணங்கப்படுகிறது. இவ்வண்டங்களை யெல்லாம் தோற்றுவித்து காக்கும் 'அன்பன்னை' என இறைவனை வணங்குதலே பெருநெறி. கடவுளை ஆண் முறையில் வைத்து வழுத்தும் பெரியாரும் இந்நெறியினின்றும் நீங்கினாரில்லை. சிவ பரம்பொருளை நோக்கி 'என் புருக்கி' மணிவாசகர்.

அம்மையே! அப்பா! ஒப்பிலா மணியே
அன்பினில் விளைந்த ஆரமுதே'

என முதற் கண் அம்மையே என்று விளிக்கின்றார். சிவனுடைய கூடல் விளையாடல் அறுபத்து நான்கினையும் கூறப்புகுந்த பரஞ்சோதி மாமுனிவர்

'சத்தியாய்ச் சிவமாகித் தனிப்பர
முத்தியான முதலைத் துதி செய

என்று காப்புக் கூறுகின்றார். தாயின் அன்பின் மூலந்தான் குழந்தைகள் அப்பனது அருளைத் தேடுகின்றன. தாயருள் பெற்றபின் தந்தையின் கூட்டுறவு கிடைக்கவேண்டும்; இஃதே பட்டினத்தார் ஞான வழியால் 'தாயுடன் சென்று தாதையைக்கூடி' என்று விளக்குவது. பிற்காலத்துப் புலவர்களும் இந் நெறியினையே கையாண்டனர். இரண்டொரு சான்றுகள் காட்டுதும். ஐந்தக்கரப்படியில் ஐம்பொற் காசு பெற்ற அருட் புலவராகிய படிக்காசுத் தம்பிரான், எம்பெருமான் அருள்பெற வேண்டி எம்பெருமாட்டி யிடம் 'தாயே! அரியணைமீது நின்கேள்வன் நின்னோடு கொஞ்சிக் குலாவி மகிழுங் காலத்து என் குறைகளை யெல்லாம் மெள்ளச் சொன்னால் உன் வாய் முத்தம் உதிர்ந்திடுமோ' எனப் பொருள் கொண்ட

ஆய்முத்துப் பந்தரின் மெல்லணை மீதுன் னருகிருந்து
நீமுத்தம் தாவென் றவர்கொஞ்சும் வேளையில் நித்தநித்தம்
வேய்முத்த ரோடென் குறைகளெல் லாமெல்ல மெல்லச் சொன்னால்
வாய்முத்தம் சிந்தி விடுமோசெல் வேலி வடிவம்மையே'

என்று குறையிரக்கின்றார். இதுபோன்றே சிவப்பிரகாசப் பெருந்தகையாரும் தாம் எழுதிய பெரியநாயகி யம்மை விருத்தத்துள் 'என்மனக் காட்டகத்துள் விளங்கும் காமத் தீக்கும், கடுஞ்சினப் புலிக்கும், களிப்பு யானைக்கும் அம்மையே! நீ யஞ்சினையேல் நெருப்பில் நடமிட்டு யானை புலி முதலியவற்றின் தோலுடுத்த நின்கேள்வனையும் உடன் கூட்டி வருவாயாக' என்று பொருள்படும்,

காமமென் கின்ற கதுவுவெந் தீயும் கடுஞ்சின மெனப்படு புலியும்
களிப்பெனுஞ் சிறுகட் புகர்முகப் புழைக்கைக் கறையடிக் களிநல்யா
[னையுமே
தாமிகு மெனது மனமெனும் வனத்தில் தனிவரல் வெருவினை யாயின்
தழலினின் றாடி கரிபுலியுரிபோர்த் தடுத்தஆண் துணையொடும் வருவாய்.

என்று கூறிப்போந்தார். இது குறித்தன்றோ விவேகானந்த ஸ்வாமிகளின் தவப் புதல்வியாராகிய நிவேதிதா தேவியார் "உலகத்திற் குறுதிபயக்கும்

பேறுறவான கொள்கை யாதெனில் அம்மை யுணர்ச்சியே. அவன்போன்று நாமும் அன்பு வேண்டுவார்க்கு அன்பு கொடுப்போம். 'அம்மா' என்ற சொல் தான் உலகக் கடவுள் துயருறும் இந்திய உயிர்கள் வந்து அடையும் துறை முகம். துன்பமுண்டாங் காலை அவர்கள் கூவுவது 'ஆ! கடவுளே!' என்றல்ல. ஆனால் 'ஆ! அம்மா!' என்பதுதான்" என்று நன்கெடுத்து விளக்கியுள்ளார். நம் நாட்டுப் பழம் பெரு மக்கள் பலரும் இக்காலத்தில் பகவான் ஸ்ரீ இராமகிருஷ்ணர், அரவிந்த கோசர், பாவலர் பெருமான் பாரதி, வங்க தேசத்து ராமப்பிரசாதர் முதலியோர்களின் நூல்களைப் படித்தோர்க்கு இவ்வுண்மை நன்கு விளங்காமற்போகாது. எவ்வுருவில் ஈசனைப் பணிவாராயினும் எவ்வுருவில் ஈசன் அவர்கட்கு அருள்செய்வானாயினும் அவ்வுருவமெல்லாம் அம்மை உருவமென்றே கொள்ளல் வேண்டும். ஈசற்கு பருவுரு எவற்றுள்ளும் திகழும் அருளுரு தாயின் தலையன்பே யாமென்க. அன்பு மிக மிக நண்ணிய தாய் 'சென்று சென்றணுவாய்த் தேய்ந்து தேய்ந்து தேய்ந் தொன்றாய்' பானுடன் கூடுங்காலத்து அனைது வெளியுருமாறி உள்ளுருவாம் அம்மையின் வெகு நுண்மையாகிய அன்புருவே எங்கும் விளங்குமாதலால் அம்மையே உண்மையில் உள்ளாள் என்பது வெள்ளிடை மலை. இது பற்றியன்றோ திருவாதவூரர் அன்புடையாற்கு இறைவன் தாயாகத்தான் விளங்குகின்றார் என்பதை,

> 'சாயாஅன் பினைநாடொறும் தழைப்பவர்
> தாயே யாகிவளர்த் தனைபோற்றி'

என்று விதந்தோதுகின்றார். அன்பை அன்பாற்றான் பெறமுடியும். அன்புறை விடமும் அன்பு பெறுமிடமும் அம்மையே. ஆகவே அம்மை வணக்கம் எவ்வணக்கத்தினும் உயர்ந்தது என்பது பெற்றாம். அவ்வணக்கத்தைப்பற்றி இனிப் பேசுவாம்,

> 'ஆதிப் பழம்பொருளின் ஊக்கம்—அதை
> அன்னையெனப் பணிதல் ஆக்கம்
> சூதில்லை காணுமிந்த நாட்டீர்—பல
> தொல்லை மதங்கள்செய்யுந் தூக்கம்.'—பாரதி.

புலவர் காளமேகம் நடராஜனைப் பார்த்து இவ்வாறு கூறுகிறார்.

> "நாட்டுக்கு வாட்டுக்கு நாலுகாலையாநின்
> ஆட்டுக் கிரண்டு காலானாலும்—நாட்டமுள்ள
> சீர்மேவு தில்லைச் சிவனே யிவ்வாட்டைவிட்டுப்
> போமோசொல் லாயப் புலி"

நின் ஆட்டு=உன்னுடைய நடனம்.

புலி-என்பது புலிக்கால் முனிவர் (வியாக்கிரபாதர்.)

# : முத்தும், முத்தமிழும் :

(ரா. பி. சேதுப் பிள்ளை, பி. ஏ., பி. எல்.)

பழம்பதியாகிய பாண்டி நாட்டில், செம்மொழிகளில் ஒன்றாய செழுந் தமிழும், நவமணிகளில் ஒன்றாய நல் முத்தும், விளைந்து எங்கும் இன்னொளி வீசிய பெருமைப் புலவர் பாடும் புகழமைந்ததாகும். வட மொழிக்கும் தென் மொழிக்கும் வரம்பாயமைந்த வேங்கட மலையின் தென்பால் விளங்கிய திரு நாடு முழுமையும், தமிழ் நாடென்று அழைக்கப்பெறினும், பண்ணுறத் தெரிந் தாய்ந்த பைந்தமிழின் மணம், பாண்டி நன்னாட்டிலேயே கமழ்வதா யிற்று. இதனாலேயே தமிழகத்தில் அடங்கிய சில ஊர்களின் சிறப்பை உரைக்கப் போந்த ஔவையார்,

> "நல் அம்பர் நல்ல குடியுடைத்து, சித்தன் வாழ்வு
> இல்லம் தொறும் மூன்று எரியுடைத்து—நல்லரவப்
> பாட்டுடைத்து சோமன் வழிவந்த பாண்டிய நின்
> நாட்டுடைத்து நல்ல தமிழ்"

என்று பாண்டி நாட்டைப் புகழ்ந்து போந்தார். செவிக்கின்பம் பயக்கும் செழுந்தமிழ் மொழிகள், பூழியன் நாட்டில் வழங்கக் கண்ட இந்நல்லிசைப் புலமை மெல்லியலார், அத்தமிழின் நீர்மையை "நல்ல தமிழ்" என்று நல முறப் புகழ்ந்த முறை அறிந்து இன்புறத் தக்கதாகும்.

> "செந்தமிழ் நாடெனும் போதினிலே, இன்பத்
> தேன்வந்து பாயுது காதினிலே"

என்று செவிச்சுவை யுடைய ஓர் செல்வர் கூறியவாறு, செந்தமிழ் மொழி யின் செம்மை சான்ற இன்பம் திருந்திய செவிகளில் தேன்போல் இனிப்ப தாகும். செஞ்சொல் நயமறியும், செவிச் சுவை யுடையார்க்கே நல்ல தமி ழின் நயமும் இனிமையும் தோன்றுவதாகும். இவ்வாறு தமிழின் இனிமை தலையாய இன்பம் பயத்தலாலேயே, தமிழ் மொழியாற் புகழப்படும் பெருமை தலையாய பெருமையாகக் கருதப்பட்டது. மதுரம் ஒழுகும் தமிழ் மொழி பயிலும் மதுரைமா நகரில் தவழ்ந்து வீசிய தென்றலின் இனிமை யைப்,

> "புலவர் நாவிற் பொருந்திய தென்றல்."

என்று சிலப்பதிகாரம் புகழ்ந்துரைக்கின்றது. முத்தமிழ் வளர்த்த சங்கப் புலவரால், புகழப்பெற்ற பெருமையே அப்பூங்காற்றின் இணையற்ற பெருமை யென்று எடுத்துரைக்கும் இளங்கோ வடிகளது தமிழன்பை என்னென்று

புகழ்வோம்? இன்னும் பூவார் சோலைகளின் வழியாய்ப் புகுந்துலாவிய, வளமார்ந்த வையை ஆற்றை,

"புலவர் நாவிற் பொருந்திய பூங்கொடி
வையை என்ற பொய்யாக் குலக்கொடி"

என்று சிலப்பதிகாரக் கவிஞர் எழுதியமைத்த செம்மை எண்ணுந்தோறும் இன்பம் பயப்பதாகும். ஆகவே பைந்தமிழ் பயிலும் பாண்டி நாட்டின் ஆறும், காற்றும், தமிழொடு கலந்து, தமிழ் மணம் பெற்றுத் தலையாய இன்பம் விளைக்கக் காணலாம். ஆகவே மூவாத் தமிழின் மூக்கவராய் முளைத்தெழுந்த முத்தமிழும் பழுதறப்பயிலும் நாடாய்ப் பாண்டி நாடு விளங்கிற்று.

முத்தமிழின் ஒளி நிறைந்த பாண்டி நாட்டிலேயே முத்தின் ஒளியும் முளைத்தெழுவதாயிற்று. முத்துப் பல விடங்களிற் பிறக்கும் என்று புலவர் புனைந் துரைப்பினும், பாண்டிய நாட்டின் முத்தே பழுதற்ற முத்தாகக் கருதப்பட்டது. இப்பெருமையை வியந்துரைக்கப் போந்த ஒளவையார்,

"வேழம் உடைத்து மலைநாடு, மேதக்கச்
சோழவளநாடு சோறுடைத்து—பூழியர் கோன்
தென்னாடு முத்துடைத்து, தெண்ணீர் வயல் தொண்டை
நன்னாடு சான்றோர் உடைத்து"

என்று புகழும் திறம் போற்றத்தக்கதாகும். சேர மன்னனது மலை நாடு வேழச் செல்வமுடைய தென்றும், சோழ மன்னனது நீர்நாடு நிலவளமுடைய தென்றும், தொண்டைமானது நன்னாடு சான்றோர் மலிந்த இடமென்றும், மூந்நாட்டையும் முறையே புகழ்ந்த மூதறிவாட்டியாய ஒளவை, பாண்டியன் நாட்டை முத்து விளையும் நாடாக வியந்துரைத்த நயம் விழுமியதாகும். முத்து விளையும் முது நாட்டிற் பிறந்து வளர்ந்து, அருந் தமிழ்ப் புலமையொடு, ஆறுமுகன் அருளும் அமைந்து விளங்கிய குமர குருபர அடிகள், முத்துச் சுரக்கும் இடங்களை முறைப்படுத்திக் கூறும் அழகு, அறியத் தக்கதாகும்.

"கோடும் குவடும் பொரு தரங்கக்
குமரித் துறையிற், படுமுத்தும்,
கொற்கைத் துறையில் துறைவாணர்
குளிக்கும் சலாபக் குவான் முத்தும்
ஆடும் பெருந்தண் துறைப் பொருனை
ஆற்றில் படுதெண் நிலா முத்தும்
அந்தண் பொதியத் தடஞ்சாரல்
அருவி சொரியும் குளிர் முத்தும்"

சாலச் சிறந்தனவாக. அடிகள் விரித்துரைக்கின்றார். குமரித் துறையிலும், கொள்கைத் துறையிலும், பொருனை ஆற்றினும் பொதியத் தருவியினும் அழகிய முத்து அகப்படும் என்று அடிகள் அருளிய வாக்கு, கிரீக்கரது பழைய நூல்களால், வலி யுறுத்தப்படுகின்றது. மூவாயிரம் ஆண்டுகட்கு முன்னரே, முதிய நாகரிகம், உற்று விளங்கிய, யவனர் என்னும் கிரீக்கர்கள், தமிழ் நாட்

டின் தனிவளமறிந்து, தமிழ்மக்களோடு, வாணிகம் செய்த வரலாறு பழந் தமிழ் நூல்களாலும் பிறவாற்றானும் நன்கறியப் பட்டதாகும். கடல் வழியாய்க் கலங்களிற் போந்து, துறைமுகங்களில் அமர்ந்து தமிழ்மக்களோடு கலந்து பண்டமாற்றுச் செய்த யவனரை,

"கலந்தரு திருவிற் புலம்பெயர் மாக்கள்
கலந்திருந் துறையும் இலங்குநீர் வரைப்பும்"

என்று சிலப்பதிகாரம் குறிக்கின்றது. இத்தகைய யவனர் கொற்கைத் துறையிலும் அமர்ந்து, அங்கு விளைந்த ஆணி முத்துக்களை வாங்கிச் சென்ற, வரலாறு அவரது பழைய நூல்களிற் குறிக்கப்படுகின்றது. அக்காலத்தில், கொற்கைநகரே, பாண்டியநாடின் தலைநகராய்க் கலந்தரு திருவிற் களித் திருந்தது. கொற்கையாளி என்னும் பெயரும் இதனாலேயே பாண்டிய மன்னனைக் குறிப்பதாயிற்று. பொதிய மலையிற் பிறக்கும் பொருநையாறு கடலோடு கலக்கும் துறையில் செழித்து விளங்கிய கொற்கைத் துறையினின்றும் கருங்கடல் விலகிய காலத்து, காயல் என்னும் கடற்கரையூர் முத்துக் கொழிக்கும் துறையாய் அமைந்தது. காயலும் கடலாற் காயப்பட்ட பொழுது தூற்றுக்குடி துறைமுகமாய் விளங்கத் தலைப்பட்டது. இத் துறை முகத்தில் இன்றும் முத்து விளையக் காண்கின்றோம். ஆகவே முற்காலத்தில், கொற்கைத் துறையில் விளைந்த பெருமுத்தைக் கிரீக்கர்கள் விரும்பியது வியப்பாமோ?

பழந் தமிழ்ப்பதியில் விளைந்த பருமுத்து, கண்ணினைக் கவரும் வெண்ணிறம் வாய்ந்து விளங்கியமையால், அம் முத்தாலாய கோவையை முடியுடை மன்னர் அணிந்து மகிழ்வாராயினர். இன்னும் அழகிய மாதர்க்கு முத்தாரம் அழகுக் கழகு செய்யுமென்று கவிஞர் போற்றிப் புகழ்வாராயினர். திருமகளாய சீதையின் செம்மேனியில் இலங்கிய வெண் முத்தாரத்தின் பெருமையை,

"கோணிலா வான்மீன்கள் இயைவன கோத்த தென்கோ
வாணிலா வயங்குசெவ்வி, வளர்பிறை வகிர்ந்த தென்கோ
நாணிலா நகையினின்ற நளிர்நிலாத் தவழ்ந்த தென்கோ
பூணிலா மேனிசேர்ந்த முத்தையான் புகல்வ தென்னோ"

என்று கம்பர் வியந்துரைக்கும் முறை சால இனியதாகும். இன்னும் வெண்மை சான்ற அழகிய பொருள்களையெல்லாம், கவிஞர் முத்துக்குவமை கூறி மகிழ்ந்தார்கள். முல்லை அரும்பையும் வென்ற வெள்ளிய முறுவலமைந்த மங்கையை "முத்தன்ன வெண் நகையாய்" என்று மணிவாசகப் பெருமான் வியந்துரைக்கும் முறை அறிந்து போற்றத் தக்கதாகும். இவ்வாறே சீதையின் முறுவலைச் சிறப்பிக்கப் போந்த செஞ்சொற் கவிஞராய கம்பரும்,

"முல்லையும் கடல் முத்தும் எதிர்ப்பினும்
வெல்லும் வெண் நகையாய்"

என்று இராமன் வாயிலாக வியந்துரைக்கின்றார். ஆகவே முத்தமிழ் நாட்

டில் விளைந்த முத்து, முத்தமிழிலும் புகுந்து தமிழன்னையின் மேனியில் இலங்குவதாயிற்று. கண்ணுக்கினிய நல்முத்தும், கருத்துக்கினிய நற்றமிழும் பாண்டிய நாட்டில் பண்புறத் திகழ்ந்தமையாலேயே இந்நாட்டை 'வையகத் துறக்கம்' என்று கவிகள் வாயார வாழ்த்துகின்றார்? புலவர் நாடு என்று புகழப்படும் வானவர் நாடு, முத்தமிழ் அமுதம் சுரக்கும் தமிழ்ப்புலவர் நாட்டுக்கு இணையாகாதென்று செந்தமிழ்ச் சுவை தேர்ந்த கம்பர் கூறுகின்றார்.

"அத்திருத்தகு நாட்டினை அண்டர் நாடு
ஒத்திருக்கும் என்றால் அவ்வுரை ஒக்குமோ,
எத்திறத்தினும் ஏழுலகும் புகழ்
முத்தும் முத்தமிழும் தந்து முற்றுமோ"

என்று கம்பரது அருங் கவியாகும். தெவிட்டாத் தேன் சொரியும் தமிழ் மொழி, தேவர் நாட்டு அமுதினும் இனியதென்றும், தென்கடல் முத்தின் திகழ் ஒளிச்செல்வம் தேவரது அளவிறந்த செல்வத்தினும் அருமை வாய்ந்ததென்றும், அழகிய மொழிகளால் இந்நாட்டின் பெருமையை எடுத்துரைத்த கம்பரது ஆர்வம் பொன்போற் போற்றத் தக்கதாகும். அமிழ்தினு மினிய தமிழ்மொழியின் கண்ணும், பல்வளம் சுரக்கும் பைந்தமிழ் நாட்டின் கண்ணும், கல்வியிற் பெரிய கம்பர் தலையாய அன்பு செலுத்தினார் என்பதற்கு வேறு சான்றும் வேண்டுமோ ?

## தாய்—சிசு மரணத்திற்குக் காரணம்.

நமது இந்து தேசத்தில் தாய்களின் மரண விகிதமும் சிசுக்களின் மரண விகிதமும் தற்போது அதிகமாகவிருக்கிறது. ஒரு வயதுக்குட்பட்ட சிசுக்களில் 1000–க்கு 260 பேர்கள் வருஷவாரி மாண்டு போகிறார்கள். தாய்மார்கள் கர்ப்பிணிகளாக விருக்கும்போது ஆரோக்கிய விதிகளைக் கவனியாமல் தேகத்தை பலஹீனப் படுத்திக்கொள்வதும், பிரஸவ காலத்தில் டாக்டர், தேர்ச்சிபெற்ற மருத்துவ ஸ்திரீ இவர்கள் உதவி இல்லாமல், புராதன பழக்கத்தைக் கைப்பிடித்து ஒன்றும் தெரியாத மருத்துவகுல ஸ்திரீகளைக் கொண்டு மருத்துவம் செய்துகொள்வதும், சிசு பிறந்தபிறகு அதற்கு வேண்டிய போஷிப்பைச் சரிவர செய்யாமலிருப்பதுமே இதற்கு முக்கிய காரணங்களாக விருக்கின்றன.

ஆசிரியர் சீடனுக்கு

# உபதேசிக்கும் முறைமை.

தமிழ்ப்பண்டிதர்-ஆ. கமலநாத முதலியார்.

விஷம் பொருந்திய பற்களையுடைய பாம்பு தான் உரித்த உரியைத் தன்னதென்று சொல்லுந் தன்மையதாகுமோ? பட்சியானது வாசம் பண்ணிக் கொண்டிருந்த குடம்பையைத் தன்னதென்று சொல்லுந் தன்மையதாகுமோ? அதுபோல நரை திரை மூப்புச் சாக்காடுகளுக்குத் தானமாயிருக்கும் தேகம் நானல்ல. தேகத்தில் உள்ள தத்துவங்களை யெல்லாம் நியதி கழித்த பின்பு எஞ்சிநின்ற அறிவு சொரூபமா யிருக்கும் பிரமமே நான் என்பதாம். சாக்கிரத்தில் அறிந்ததும், சாக்கிரத்திலுள்ள நினை வொழிந்து சொப்பனத்தின் கண்ணே யறிந்ததும் சுழுத்தியில் அறிந்ததும் தினந் தோறும் நான் அனுபவிப்பதே யாம். என்றுகூறிய சீடனுக்கு விளங்கும்படி இன்னம் ஐயமற வுணர்த்துகின்றனர். சுத்தமனம் பொருந்திய அன்புடைய சீடனே கேட்பாயாக.

பிரபஞ்சமாக வேணுமென்று நினைத்த நினைவே அரூப நினைவான மனமும் அந்தக்கரணமுமாம்.

இங்ஙனம் சந்தேக சங்கற்பம் பண்ணுகிற நினைவே மனது. ஆகையால் இம்மனத்தையும், மேற்கூறிய அந்தக்கரணத்தையும் வென்றவர்களே பிறப் பிறப்பில்லாச் சீவன் முத்தர்களாம். உதாரணம்.

தாமவியாள கடர் கதை

மனமெனும் வினையை வென்றோர் மலரடி முடிமேற் கொள்வாம்
இனநகர ரகங்க ளென்னு மிராச்சியத் திருந்து வாழ்ந்த
முனமுறுபாவ மென்னு மும்மதக் களிற்றினாலும்
கனமயற் படைகளாலும் கரணமாம் பகையை வெல்வாய்.

வாசனையினாலே இருக்கிற நினைவே சித்தம்.

"சித்த நினைவுஞ் செயுஞ் செயலும் நீயென வாழ்
உத்தமர்கட்கான வுறவே பராபரமே"

என்றபடியே சதாகாலமும் இச்சித்தம் சுத்த நினைவிலேயே யிருந்தால் முத்திப் பேறும்.

வாசனையை நிச்சயிக்கிற சங்கற்பம் நீங்கினால் முத்திப்பேறும்.

இங்குப்பன்னும் பலவாலென் இயம்புஞ் சுருதி யொன்று கேள்
சங்கற்பந்தான் பவபந்தம் சங்கற்பந் தீர்ந்தது முத்தி
பங்கற்றெல்லை யழிவிலவு பவமற்றுறு மறிவுருவே
துங்கச் செகங்களென நோக்கிச் சுகமெப்படியப்படி நிற்பாய்.

யான் எனதென்று தொழில் படுகிற நினைவே அகங்காரம். இந்த யான் எனதென்னும் அகங்காரம் உள்ளவரையில் ஒருவன் ஞானத்தை யடைய மாட்டான்.

ஆகாயத்தினிடமாக நின்று வசனிப்பதாகிய வாக்கும், வாயுவினிடமாக நின்று கமனிப்பதாகிய பாதமும், தேயுவினிடமாக நின்று இடல் ஏற்றல் செய்யும் பாணியும், அப்புவினிடமாக நின்று சலமலாதிகளைக் கழிதல் செய்யும் பாயுருவும், பிருதிவியினிட ஆனந்திப்பதாகிய உபஸ்தமும் ஆகிய இவைகளைக் கருமேந்திரிய மென்று சொல்லப்படும். இவைகளை யெல்லாந் தெரிந்து கொள்கிற நினைவும், ஆகாயத்தினிடமாக நின்று சத்தத்தை அறியும் செவியும், வாயுவினிடமாக நின்று பரிசத்தை யறியும் தொக்கு இந்திரியமும், தேயுவினிடமாக ரூபத்தை அறியும் சட்சு இந்திரியமும், அப்புவினிடமாக நின்று இரசத்தை அறியும் சிங்ஙுவை இந்திரியமும், பிருதிவியினிடமாக நின்று கந்தத்தை அறியும் ஆக்கிராணமும் ஆகிய இவைகளை யெல்லாம் தனித் தனியா யறிகிற நினைவிற்கே ஞானேந்திரியமென்று சொல்லப்படும்.

தெய்வத்தன்மை நிரம்பிய திருவள்ளுவ நாயனுர் சுவையும் ஒளியும் ஊறும் ஓசையும் நாற்றமுமென்று சொல்லப்பட்ட தன்மாத்திரைகள் ஐந்தனது கூறு பாட்டையும் ஆராய்வான் அறிவின் கண்ணதே உலகம். என்று கூறி யிருக்கின்றூர்.

அவற்றின் கூறுபாடாவன. பூதங்கட்கு முதலாகிய அவைதா மைந்தும், அவற்றின்கட் டோன்றிய அப் பூதங்களைந்தும், அவற்றின் கூறுகிய ஞானேந்திரியங்க ளைந்தும் கன்மேந்திரியங்க ளைந்துமாக இருபதுமாம். வகை தெரிவான் கட்டென உடம்பொடு புணர்த்ததனல் தெரிகின்ற புருடனும் அதன் தெரிதற் கருவியாகிய மான் அகங்காரம் மனங்களும் அவற்றிற்கு முதலாகிய மூலப் பகுதியும் பெற்றும்.

தத்துவ மிருபத் தைந்தனையும் தெரிதலாவது மூலப்பகுதி ஒன்றில் தோன்றிய தன்மையில் பகுதியே யாவதல்லது விகுதியாகாதெனவும், அதன் கட் டோன்றிய மானும் அதன்கட் டோன்றிய அகங்காரமும், அதன்கட் டோன்றிய தன் மாத்திரைகளுமாகிய ஏழும் தத்தமக்கு முதலியதனை நோக்க விகுதியாதலும், தங்கட் டோன்றுவனவற்றை நோக்கப் பகுதியாதலு முடையவெனவும் அவற்றின்கட் டோன்றிய மனமும் ஞானேந்திரியங்களும் கன்மேந்திரியங்களும் பூதங்களுமாகிய பதினறும், தங்கட் டோன்றுவன வின்மையின் விகுதியே யாவதல்லது பகுதியாகாவெனவும், புருடன்

தானென்றில் தோன்றாமையானும் தன்கட் டோன்றுன வின்மையானும் இரண்டு மல்லவெனவும் சாங்கிய நூலு ளோதியவாற்றன் ஆராய்தல். இவ் விருபத்தைந்து மல்லது உலகெனப் பிறிதொன் றில்லையென உலகின துண்மை யறிதலின் அவனறிவின் கண்ணதாயிற்று.

சத்தாதி விடயங்கள் ஆகாரமாய்ச் சத்தத்தைக் கிரகிக்கிற நினைவே தன் மாத்திரை.

பஞ்சபூத ஆகாரமாய்ப் பிரகாசிக்கிற நினைவே பஞ்சபூதமென வறிக.

தானாகிற சச்சிதானந்த சொரூபத்தை மறந்து தேகம் தானாய் நின்ற விஷயானந்த நினைவாகிய உயிருக்குச் சுகதுக்க வேதனையும் சடாகாரமுமே தோன்றும்.

தானாகிற சச்சிதானந்த சொரூபத்தை நினைத்துச் சிந்தனைபண்ணின சாட்சியாய் நின்ற அறிவு என்று தோன்றுமெனில்:

ஞான இச்சாகிரியைகளோடே தேகமுதல் செகத்தாகாரமாய் மெய்தா னாகிற அறிவானந்தமே மெய்யென்று தோன்றும்.

சிவானுபூதிச் செல்வர்களாகிய பெரியோர்கள் ஞானத்தை வெவ்வேறு விதங்களாகக் கூறுவர், அவ்வாறு கூறும் ஞானங்களிலெல்லாம் மகா வாக் கியம் எடுத்துக்கூறும்ஞானமே தலைமையுற்றதாகும். இத்தகைய ஞானத்தை ஆசிரியர் சிஷியனுக்குக் கூறுகின்றார்.

இருக்கு, யசுர், சாமம், அதர்வண மென்கிற நான்கு வேதங்களும் அற்பசுருதி வாக்கிய மென்றும், பிரபல சுருதிவாக்கிய மென்றும் இருவகைத் தாம். அற்பச் சுருதிவாக்கியம் கருமானுஷ்டானத்தைப் புகலும். பிரபலச் சுருதி வாக்கியம் அத்யாத்மத்தைக் கூறும். இவை முப்பத்திரண்டு உபநிட தங்களா யிருக்கும். இது நான்கு வாக்கியங்களைப் பிரதி பாதிக்கும்.

அவை, பிரக்ஞானம் பிரமம், அகம்பிரமாஸ்மி, தத்துவமசி, அயமாத் மாப்பிரமம் என்பனவாம்.

இந்நான்கு வாக்கியங்களினும் தத்துவமசி மகாவாக்கியத்திற்கே மகா வாக்கிய மென்று பெயர்.

அஃதெங்ஙனென்னில் நான்கு வாக்கியத்தி னருத்தமும் இவ்வாக் கியத்தி னிருக்கையாலும் அர்வயபதம் இதனிடத்தே யிருக்கையினாலும் அவாங் மனோகோசரமாயிருக்கிற வஸ்துவை கரதலா மலகம் போலக் காட்டு கையினாலும், நான்கு வருணத்தாலும், மூன்று மதத்தாலும், மூன்று இலட் சணத்தாலும் சொல்லிற்று. ஆறு குறியும் எட்டு இயல்புமா யிருக்குமென் றும் அறைந்தது.

அவை யெவையென்னில்—தத்-துவம்—அ-சி-இவைகளாம்.

மூன்று பதமாவன-தத்பதம்-தொம்பதம்—அசிபதம் இவைகளாம்.

மூன்று இலக்கணமாவன. சீவ-பர-ஐக்கியம் இவைகளாம்.

ஆறு குறியாவன. வடிவு, நுண்மை, மாப்பொருளுடைமை, நிறைவு, இரண்டற விளங்கிய முடிபு என்றும், பழமை யென்றும், புதுமையுமாம்.

எட்டியல்பாவன—கேள்வி யிறந்ததாதல், தரிசன மிறந்ததாதல், வீர மிறந்த தாதல், எல்லையில்லாத ஆனந்த முடையதாதல், எல்லையில்லாத

ஞானமுடைய தாதல் காலமிறந்த தாதல், தேசமிறந்த தாதல், திசையிறந்த தாதலாம்.

இப்படி மகாவாக்கியத்தில் சொல்லப்பட்ட வஸ்து எப்படி விளங்குமென்னில் ஆசாரியர் திருவருளினாலே சொல்லுகிற சிரவணம், மனனம், நிருத்தியாசனம், என்று மூன்று வகையினாலே விளங்கும். இந்த மூன்று வகையும் விசாரிக்குமிடத்து ஸ்தூல சிரவணாதி மூன்றென்றும், சூட்சும சிரவணாதி மூன்றென்றும் இரண்டுவிதமா யிருக்கும்.

ஆகையால் இத்தகைய பிரம்மத்தை அறிந்து கொள்ளும்படி ஆசிரியர் உபதேசித்த மொழியின்படி மாணாக்கன் அறிவுமயமாய் நின்று பார்க்க எங்கும் வியாபித்துள்ள பிரமத்தைத் தன்னுள்ளே அறிந்து தெரிந்து ஆனந்த மயமாயினான்.

தஞ்சமாங் குருவுஞ்சொன்ன தத்துவ வழிதப்பாமல்
பஞ்சகோ சமுங்க டந்து பாழையுந் தள்ளியுள்ளில்
கொஞ்சமா மிருப்பும் விட்டுக் கூடஸ்தன் பிரமமென்னும்
நெஞ்சமு நழுவி யொன்றாய் நின்றபூ ரணத்தைக் கண்டான்.

என்பதை யனுசரித்து ஆசிரியர் பக்குவமுடையோனுக்கு உபதேசித்த மாத்திரத்தில் உடனே நிட்டைகூடி ஞானாசாரியர் உரைத்த உபதேச மொழியினை ஆதாரவாகக்கொண்டு போகவாசனையை மறந்து தற்போத மூனவறம் விடமே மேலான தென்றும், அந்நிலையே திருவருளெய்துதற் கிடனாமென்றும் அவ்விடத்தே நிட்டையும் கைகூடி வருமென்றும் அவ்வாறிருந்து தன்னிலையினையுமறந்த அவசரத்து அருண்மயமா மென்றும், அத்தகைய ஆனந்தத் தழுந்துகின்றவரே பிறவாச் செல்வத்தை யடைந்தவ ரென்றும் கூறப்படுகிறது.

'வண்டி
யோட்டி நம்மினும்
புண்ணியவான்' என்றார்
ஒரு சாது:—எப்படி? அவன் 'திருவல்
லிக்கேணி,' 'காஞ்சீபுரம்,' 'ஸ்ரீரங்கம்' என்று
புண்ய க்ஷேத்திரங்களின் பெயரை ஒரு நாளைக்கு
ஆயிரம் தடவைக்குமேல் உரக்க ஸ்மரிக்கிறான். அந்த
விதத்தில் அவன் புண்ணியவா னாகின்றான். நாம
ஸ்மரணத்தின் பலனை அவனடைகிறான்.
"உணர்ந்தோ உணராமலோ என் நாம
த்தை உச்சரிப்பவர்களும் முக்தி
யடைகிறார்கள்" என்கிறார்
கண்ணன் கீதையில்.

# அறம் பொருள் இன்பம்

——:(o):——

(ஸ்ரீமதி நாகலக்ஷ்மி அம்மாள்.)

'தருமம் அர்த்தம் காமம் என்னும் மூன்று புருஷார்த்தங்களுக்கும் உரிய கிருகஸ்தருடைய ஒழுக்கம் எப்படிப்பட்டது? அவர்கள் பிழைப்புக்கு எவ்வகையான பொருளீட்டம் கூறப்பட்டுள்ளது?' என்று உமை கேட்க மகேஸ்வரர் சொன்ன மறுமொழி கீழ்வருமாறு:—

'தேவியே! நீ கேட்பது நியாயந்தான். இவ்வுலகத்திலுள்ள நல்லொழுக்கம் பெரும்பாலும் கிருகஸ்தர்களுக் குரியதாகச் சொல்லப் படுகிறது. அவர்களைக் காப்பதற்காகவே அரசர்கள் பூமியில் பட்டாபிஷேகம் செய்யப்படுகின்றனர். இப்பொழுது, மனிதர்கள் எல்லோருக்கும் பொதுவாயுள்ள தொழிலைச் சொல்லுகிறேன் கேட்பாயாக.

கல்வி, வர்த்தகம், பணிவிடை, சிற்பம், ஸங்கீதம், கைத்தொழில் முதலியவை மனிதர்களின் ஜீவனத்திற்காக ஏற்படுத்தப்பட் டிருக்கின்றன. மானிட ஜன்மமே தொழிலுக்கு இடம். மற்ற பிராணிகள் இன்ப துன்பங்கள் மாத்திரம் அநுபவிக்க உள்ளவை. ஆதலால், எல்லாப் பிராணிகளுக்கும் மனிதரைப்பற்றியே ஜீவனம் விதிக்கப் படுகிறது. எல்லா மனிதர்களுக்கும் முதலில் கல்விப் பயிற்சிதான் பிரதானமானதாக விதிக்கப்படுகிறது. காரியா காரியங்களை அறிவது கல்வியினாலன்றி மற்றொன்றினாலில்லை. கல்வியினால் அறிவு விரிவாகிறது. அறிவினால் உண்மை புலப்படுகிறது. உண்மை யறிந்தவன் பரிசுத்த மனமுள்ளவனாகி எல்லாப் புருஷார்த்தங்களையும் அடையத் தக்கவனாகிறான். கல்வி கற்றவன் உலகத்தில் சிறந்த ஜீவனம் செய்ய முடியும். ஆதலால், முதலில் ஒருவன் தன்னைக் கல்வியினால் பிரகாசிக்கச் செய்துகொண்டு, இந்திரியங்களையும், கோபத்தையும் அடக்கி ஆத்மாவைச் சுத்தப் படுத்திக்கொள்ள வேண்டும். ஆத்மாவைச் சுத்தப்படுத்திக் கொண்ட பிறகு, பெரியோர்களும் பூஜிப்பதற் குரியவனாவான். மனம் சாதாரணமாக குலத்தில் தொடர்ச்சியாக வரும் ஒழுக்கத்தையே முதலில் பற்றுமென் பதனால் நல்ல குலத்திற் குரியவை என்று தான தருமங்கள் ஆதிகாலத்தில் ஏற்படுத்தப்பட்டன. ஒருவன் வித்தையினாலேயே தன் ஜீவனத்தைக் கருதுவானாயின், குருவுக்குப் பணிவிடை செய்தல் முதலிய குணங்கள் பொருந்தி, நல்ல குருவினிடம் ராஜ வித்தை யாயினும், உலக நடைக்கு உரிய ஏனைய வித்தையாயினும் கற்க வேண்டும். அந்த வித்தையைப் புத்தகங்களைப் படித்தல், விஷயங்களை யூகத்துடன் பயிலுதல் முதலிய முயற்சி செய்து உறுதிப் படுத்திக் கொள்ள வேண்டும்.

இவ்வாறின்றி வேறு வகையால் மனிதன் கல்விப் பயனை அடையான். கல்வியினால் நியாயமாகப் பயன் பெற விரும்பவேண்டும். அதில் அதர்மத்தை விடவேண்டும்.

பயிர்த் தொழிலினால் ஜீவனத்தைக் கருதினால் முறைப்படி ஜலம் நிரம்பின நிலத்தில் அதற்குத் தக்கப் பயிரைச் செய்ய வேண்டும். அல்லது தேசத்திற்கும் காலத்திற்கும் தக்கபடி விலையையும் உபயோகத்தையும் பிரயாசையையும் லாப நஷ்டங்களையும் நன்றாக ஆராய்ந்து வர்த்தகம் செய்ய வேண்டும். ஊழியம் செய்து ஜீவிக்கக் கருதும் புத்தி சாலியான மனிதன் தன்னை அடக்கிக் கொண்டு ஏவுகிறவர்களுக்கு உபயோகமாக இருக்க வேண்டும். புத்தியினாலேயோ செய்கையினாலேயோ கற்பிப்பதனாலேயோ ஒருவனைச் சாரவேண்டும். வழியோடு அடுத்துப் பிறகு அந்த வேலையைச் செய்ய வேண்டும்.

அந்த யஜமானன் நம்பும்படியாகவும், சந்தோஷப்படும்படியாகவும் நடந்து கொள்ள வேண்டும்.

ஊழியனுக்குரிய குணங்கள் பொருந்தியவனைத் தானடுத்த மனிதனை தனக்கன்பனாகச் செய்துகொள்ள வேண்டும். அவனுக்கு இன்னாததைச் செய்ய லாகாது. அவனை விட்டுப் பிரிவதற்கு முன் வேறு ஆதரவைத் தேடலாகாது.

சிற்பம், கைத்தொழில் ஆகிய இவற்றில் திறமைக்குத் தக்கபடி நியாயமான கூலி வாங்கவேண்டும். எல்லாத் தொழில்களிலும் தான் உண்மையாக நடந்து வேதனம் பெறவேண்டும். உண்மையின்றி வாங்கும் வேதனமானது பாவத்திற்குக் காரணமாகும்.

எந்தக் காரியத்தையும் ஆரம்பிப்பதற்குமுன் தன் சக்தியையும், உபாயங்களையும் இடம், காலம், கருவிகள், பிரயாசை, செலவு, லாபம் ஆகிய இவற்றோடு தர்மத்தையும் முன்னிட்டு யுக்தியைக் கொண்டு ஆராய்ந்து பார்க்க வேண்டும். மேற்சொன்ன விஷயங்களை ஆராய்ந்து தெய்வானுகூலத்தையும் கண்டறிந்து அதன்பிறகு தனக்கு எதில் நன்மை யுண்டாகுமோ அதைச் செய்யத் தொடங்க வேண்டும்.

ஒரு தொழிலை எடுத்துக்கொண்ட பிறகு தெய்வத்தாலும் மனிதர்களாலும் நேரிடும் இடையூறுகள் வராமலும் மறுபடியும் வேறு எண்ணங் கொள்ளாமலும் அத்தொழிலை எப்போதும் காப்பாற்ற வேண்டும். அதனால், கிடைத்த பொருளை அழிக்காமல் காப்பாற்றியும், விருத்தி செய்தும் அனுபவிக்க வேண்டும். ஆராய்ந்து பாராமல் சாப்பிடுகிறவனுக்கு மலை போன்றதும் அழிந்து போகும். புத்திசாலியானவன் தொழில்களினால் தனத்தையடைந்து அதை தர்மத்திற்கு ஒருபாகம், பொருளுக்கு ஒருபாகம், சுகத்திற்கு ஒருபாகம், கஷ்டங்களைப் பரிகரிப்பதற்கு ஒரு பாகமாக நான்கு பாகங்

களாகப் பகுக்கவேண்டும். அன்னதானம், ஏழைகளுக்கு உதவி செய்வது, தெய்வ பூஜைசெய்வது, மூலதனத்தைப் பெருக்குவது, அனுஷ்டானங்களை விடாமலிருக்கும் தர்மிஷ்டர்களுடன் சேர்ந்திருப்பது முதலான காரியங் களில், தர்மத்திற்காக இருக்கும் தனத்தைச் செலவிடவேண்டும். லாபத்தைப் பாராமலே தர்ம காரியங்களுக்கு தனத்தைக் கொடுக்க வேண்டும்.

பொருளுக்காக ஏற்பட்ட தனத்தை ஐஸ்வரியமும், உயர்ந்த நிலைமையும், அரசனுடைய ஸ்நேகமும் கிடைப்பதற்காகவும், வர்த்தகம் செய்வதற்காகவும், உதவியானவர்களையும், சிநேகிதர்களையும், சம்பாதிப்பதற்காகவும், விவாகச் சடங்குகளுக்காகவும், ஜீவனத்திற்காகவும், தனத்தை மிகுதியாகப் பெறுவதற் காகவும், நஷ்டத்தை நிவர்த்தி செய்வதற்காகவும், மற்றுமுள்ள இவ் வகைக் காரியங்களுக்காகவும் செலவிட வேண்டும்.

பலனைக் காரணங்களால் கண்டறிந்த பிறகு பொருளைச் செலவழிக்க வேண்டும். நஷ்டத்தை நிவர்த்தி செய்வதும், லாபத்தை உண்டாக்குவதும் பொருளே. பொருளில்லாத மனிதர்கள் பல முயற்சிகள் செய்தும் பொருளை யடையார். ஆதலால் பொருளை ரக்ஷிக்க வேண்டும். சாஸ்திரப்படி தானம் செய்யவேண்டும்.

சுகத்திற்காக ஏற்பட்ட தனத்தை தேக போஷணையின் பொருட்டு உணவைச் சிறப்பித்துக் கொள்வதற்காகவும், ஆட்டம் பாட்டுகளை அனு பவிப்பதற்காகவும், விநோத யாத்திரைக்காகவும், விளையாட்டுக்காகவும், சந்தோஷத்தினால் பரிசளிப்பதற்காகவும், மற்றும் இப்படிப்பட்ட காரியங் களுக்காகவும் செலவிட வேண்டும். தர்மார்த்த காமங்கள் மூன்றிலுமுள்ள குண குற்றங்களை ஆராய்ந்து பொருளைச் செலவிட வேண்டும்.

நாலாவது பாகத்தை ஆபத்காலத்திற்காகப் பத்திரப்படுத்தி வைக்க வேண்டும். ராஜ்யம் தவறுவதனால் உண்டாகும் கெடுதலைப் போக்குவதற் காகவும், பஞ்ச நிர்வத்திக்காகவும், தீராதவியாதியைத் தீர்ப்பதற்காகவும், கிழத்தனத்தில் உதவுவதற்காகவும், பகைவரை எதிர்ப்பதற்காகவும், அன்னிய தேசம் போவதற்காகவும், மற்றுமுள்ள ஆபத்துக்களினின்றும் தப்புவித்துக் கொள்வதற்காகவும் தனது பொருளைக் கையில் வைத்துக் கொள்ளவேண்டும்.

கஷ்டங்களினின்றும் தப்புவித்துக் கொள்வது உலகத்தில் பொருளுள்ள வர்களுக்குத்தான் எளிது. எவனுக்குச் சிறிதும் பொருளில்லையோ அவனுக்கு இம்மை மறுமை இரண்டும் இல்லை. ஆகாரத்தினால் இந்திரியங்கள் எப்படி நடக்கின்றனவோ அப்படியே எல்லாம் பொருளினால் நடக்கின்றன. ஆத லால் பொருளில் ஒரு பாகத்தைக் காப்பாற்றி வைக்க வேண்டும். இல்லா விடின் அழிந்து போம்.

உலகங்களில் மனிதர்கள் ஜீவிக்கும் வகை இது. இவ்வகையான ஒழுக்க முள்ள ஜனங்களுக்குத் தனமும் ஆயுளும் சுவர்க்கமும் சிறந்த புகழும் பெய ரும் உண்டாகத் தக்க மற்றொரு ஒழுக்கஞ் சொல்கிறேன் கேள்.

தர்ம அர்த்த காமங்களை எல்லாரும் தம் சுவாதீனத்தினுல் பகுத்து நடக்க வேண்டும். அவ்வாறு நடத்துபவர் இரண்டு லோகங்களிலும் நன்மை பெறுவர். காலையில் எழுந்திருப்பது, தேகத்தைச் சுத்தப்படுத்துவது, தெய்வ பூஜை செய்தல், ஆசாரியர்களைப் பணிவது, பெரியோர்களை எதிர்கொண் டழைப்பது, கோயிலுக்குச் சென்று கடவுளைக் கும்பிடுவது, அதிதிகளை எதிர் கொண்டழைத்து மரியாதையோடு விருந்து செய்வது, பெரியோர்களின் உபதேசப்படி நடப்பது, இதத்தையும் சன்மார்க்கத்தையும் கேட்பது, வேலைக்காரரைக் காப்பாற்றுவது, இன்சொல், கொடை இவற்றால் வசப்படுத்துவது, நியாயமான வேலை யைச் செய்வது, அநியாயத்தையும், விரோதத்தையும் விடுவது, கிருஹ கிருத்தியங்களைச் சரியாக நடத்துவது, பிள்ளைகளுக்குக் கற்பிப்பது, அவ ரவர்களை அவரவர்களுக்குத் தக்க வேலைகளில் அமர்த்துவது, தகாத காரியங் களைவிடுவித்து நல்ல காரியங்களைச் செய்விப்பது, குலத்திற்குரிய தர்மங்களைச் சரியாகக் காப்பது, தன் முயற்சியினுல் தன் குலத்தை எல்லா வகைகளாலும் சிறப்பிப்பது முதலிய இந்த குணங்கள் எல்லாம் மனிதர்களின் ஒழுக்கமென் பது திண்ணம். நன்மைக்காவும், ஞானத்திற்காகவும் எப்போதும் பெரி யோரை அடுத்திருக்க வேண்டும். பிறருக்காக ஏற்பட்ட பொருளைக் கேளா மல் எடுப்பது எவ்வகையிலும் கூடாது. பிறரை யாசிக்கலாகாது. மன வுறுதி யுடன் தன் கைவன்மையையே ஆதரவாகப் பற்றவேண்டும். ஆகாரத்திலும், ஆசாரத்திலும் தன் தேகத்தை எப்போதும் காப்பாற்ற வேண்டும். மனதிற் கினியதும், தேகத்திற் கனுகூலமானதும், எளிதில் சீரணிப்பதுமாகிய நல்ல ஆகாரத்தை அளவோடு உண்ணவேண்டும். பரிசுத்தமா யிருந்து தேவதை களுக்கும், அதிதிகளுக்கும் செய்யவேண்டிய பூஜைகள் எல்லாவற்றையும் விதிப்படி செய்து மிகுந்ததை யுண்ணவேண்டும். கடுமையாகப் பேசலாகாது. காரணம் பற்றியே வெளியில் புறப்பட வேண்டும்.

கிருஹஸ்தாசிரமத்தி லிருப்பவன் எல்லோருக்கும் வசிப்பதற்கு இட மும், குடிக்கத் தண்ணீரும், பிக்ஷையும் எப்போதும் கொடுக்க வேண்டும். சப்தாதி விஷயங்களில் இறங்கலாகாது. தன் சக்திக்குத் தக்கபடி காரியங் களைச் செய்யவேண்டும்.

கிருகஸ்தர்கள் வரவிற்குத் தக்கபடி செலவோடிருப்பதுதான் உலகத்தில் சிலாகிக்கப்படுகிறது. அபகீர்த்தியைக் கொடுப்பதும் லாபத்தைக் கெடுப் பதும், பிறரைத் துயரப்படுத்துவது மாகிய செய்கையை பயத்தினுலாவது, லோபத்தினுலாவது ஒருகாலும் செய்யலாகாது. முதலிலேயே குண குற்றங் களை ஆராய்ந்து நல்லது கெட்டது தெரிந்துகொண்ட பிறகு அந்தக் காரியத் தைச் செய்ய வேண்டும். தனது புண்ணிய பாவங்களில் தன்மனதையே எப் போதும் சாட்சியாகக் கொள்ள வேண்டும். நினைவிலும், சொல்லிலும், செய்கையிலும் பாவத்தைக் கருதலாகாது''






## வேதாந்த சாரசங்கிரக வசனம்.

(141-ம் பக்கத் தொடர்ச்சி.)

(பூ. ஸ்ரீநிவாசன், தமிழ்ப் பண்டிதர், சித்தூர்.)

சாக்கிர சாக்கிரம்:—எல்லா திருசிய பதார்த்தங்களினிடத்தும் 'இது எனது' என்னும் பாவனையில்லா திருத்தல் சாக்கிர சாக்கிரம் என்று பிரம்ம வேத்துக்களில் உத்தமர்களாகிய பெரியோர் கூறுவர்.

சாக்கிர சொப்பனம்:—சச்சிதானந்த வடிவினனாகிய தன்னிடத்து திருசிய பரம்பரையை ஆரோபித மென்றறிந்து நாமரூபங்களை விடுதல் எது வுண்டோ அதுவே சாக்கிர சொப்பனமெனக் கூறினர்.

சாக்கிர சுழுத்தி:—அகண்டமான சிதாகாசமே ரூபமாகவுடைய என்னிடத்தில் ஞான வடிவத்தை யன்றி வேறொன்று மில்லை என்றெண்ணுதல் சாக்கிர சுழுத்தி யெனப்படும்.

சொப்பன சாக்கிரம்:—மூலாஞ்ஞானம் நசிக்கின் தேகேந்திரியாதிகளின் கிருத்தியங்களால் எனக்குப் பந்தம் சிறிதும் இல்லை என்றெண்ணுதல் சொப்பன சாக்கிரமெனக் கூறப்படுகின்றது.

சொப்பன சொப்பனம்:—காரணமாகிய அஞ்ஞானம் நசித்தலால் அதன் காரியமாகிய பார்க்கிறவன்-பார்வை-பார்க்கப்படும் பொருள் என்னும் பேதம் இல்லையென் றறிதல் சொப்பன சொப்பனமாம்.

சொப்பன சுழுப்தி:—எப்பொழுது அதிசூட்சும விசாரத்தினால் ஸ்திரமாகிய தன் சித்த விருத்தி ஞானத்தினிடத்து லயமடைகின்றதோ அது சொப்பன சுழுப்தியாம்.

சுழுப்தி சாக்கிரம்:—பண்டிதா! பிரம்மாகாரமாகிய சித்த விருத்தியால் நேர்ந்த சின்மாத்திர வடிவமாகிய ஆனந்தானுபவமே சுழுத்தி சாக்கிரம்.

சுழுப்தி சொப்பனம்:-சிறிதுகாலம் அனுபவிக்கப்பட்ட (அந்தர்க்கத) ஆனந்தத்தின் அனுபவ ஸ்திதியுள்ள சமத்துவ மடைவது சுழுத்தி சொப்பனமாம்.

சுழுப்தி சுழுப்தி:—சித்த விருத்தி கைவல்யத்தைப் பாவித்துக்கொண்டு ஞானரூப மடைதலாம்.

துரியம்:—சகல அவத்தைகளினும் நிர்விகார ரூபமாய் பரப்பிரஹ்ம வடிவதாரை (நெய்த்தாரைபோல் இடைவிடா விருத்தி) துரியமெனப்படும்.

இவ்வாறு அவத்தையின் விசேஷங்களை விவரித்தறிகிறவன் சுகமாக மூக்தி யடைகிறான். சுபேச்சை முதலாகிய மூன்று பூமிகளும் சாக்கிரத்திலேயே சேர்கின்றன. நாலாம் பூமியில் துவைதபாவம் நசித்து அத்வைத பாவம் ஸ்திரப்படுதலால் உலகத்தைச் சொப்பனம்போலக் காண்கின்றனர். ஐந்தாம் பூமியை யடைந்தவன் பேத பாவம் முழுவதும் நசித்தலால் அத்

வைத பாவனையிலேயே வசிக்கிறான். ஆறாம் பூமியை யெய்தினவன் எப்பொழுதும் அந்தர்முகனு (உள்நோக் குள்ளவனு) யிருத்தலாலும் சாந்தி யடைந்தவனுதலாலும் காட நித்திரை யுள்ளவன்போல் காணப்படுகின்றான். யோகியானவன் இப் பூமியில் அப்பியாசம் செய்கிறவனுய் நன்றாய் வாசனு ரகிதனுய் கிரமமாகத் துரியாவத்தையாகிய ஏழாம் பூமியை யடைகிறான்.

## விதேக முக்தி.

எந்த நிலையில் அசத் பதார்த்த மில்லையோ, அகங்காரமு மில்லையோ, அகங்காரத்தை விட வேறான புத்தியாதிகளு மில்லையோ, எந்த நிலையில் சங்கற்ப மற்றவனுயும் யாதொரு பயமு மில்லாதவனுயும் பூரணபாவத்தி லிருக்கிறானே இந்நிலையில் விதேக முக்தியே துரியாதீதம் என்று சொல்லப்படுகின்றது. ஆகாசத்திலுள்ள வெறுங் குடம்போல உள்ளும் சூனியமானவனும் வெளியும் சூனியமானவனும், சமுத்திரத்தில் நிறை குடம்போல உள்ளும் நிறைந்தவனும் வெளியும் நிறைந்தவனுமாக வுள்ளவன் ஜீவன் முக்தன். வியவகாரியாயினும் எவனுக்கு இந்தச் சகலமும் உள்ளதுள்ளபடி அஸ்தமித்ததாய் ஆகாச மாத்திரமாய் இருக்கிறதோ அவன் ஜீவன் முக்தன். எவனுடைய சித்த விருத்தி பிராப்தித்ததற்குத் திருப்தி யடைந்ததாய்ச் சுக துக்கங்களினிடத்து உதயிக்காதோ அஸ்தமிக்காதோ (இன்பதுன்பங்க ளடையாதோ) அவன் ஜீவன் முக்தன். எவன் நித்திராவத்தையி லிருக்கிறவனுய் விழித்துக்கொண் டிருப்பானே, எவனுக்கு ஜாக்கிர மில்லையோ, எவனுக்கு ஞானம் வாசனுரகிதமாயிற்றோ அவன் ஜீவன் முக்தனெனப்படுகிறான். எவன் ராகம் துவேஷம் பயம் முதலானவற்றிற்கு அனுகூலமாய் நடப்பவனுயினும் உள்ளே ஆகாசம்போல அதிநிர்மலனுயிருப்பானே அவன் ஜீவன் முக்தன். கிருத்தியங்களைச் செய்பவனுயினும் செய்யாதவனுயினும் எவனுடைய மனே விருத்தி அகங்கார மற்றதாயிற்றோ, எவனுடைய புத்தி கர்மங்களின் குண தோஷங்களோடு சம்பந்தப்படுதலில்லையோ அவன் ஜீவன் முக்தன். எவன் சகல காரியங்களினிடத்தும் வியவகரிக்கிறவனுயினும் ராகத் துவேஷாதிக ளில்லாதவனே, எவன் எல்லா வஸ்துக்களினிடத்தும் நிறைந்திருப்பவனே அவன் ஜீவன் முக்தன். எவன் அதிபவித்திரமும் பேதரகிதமான சின்மாத்திரமே வடிவமாயுள்ளதுமாகிய பிரஹ்மத்தினிடத்து சஞ்சலமற்றவனுய் சித்த விஸ்ராந்தியடைவானே அவன் ஜீவன் முக்தன். 'இது ஜடம் அவன் இவன்' என்னுமிந்த மித்தியா மாத்திரமான திருசிய ஞானம் எவனுடைய சித்தத்தில் தோன்றுவதில்லையோ அவன் ஜீவன் முக்தன். 'நான் சித்ரூபன், நான் பரமாத்மன், நான் குணரகிதன், நான் பரத்திற்குப் பரமானவன்' என்று, எவன் ஆத்ம மாத்திர வடிவத்தோடு இருப்பானே அவன் ஜீவன் முக்தன். எவனுடைய சித்தத்தில் 'நான் தேகேந்திரியாதிகளுக்கு வேறானவன், நான் மாயா சம்பந்தமில்லாத சின்மாத்திரனுவேன், நான் பரப்பிரஹ்மமே' என்னும் பாவமுளதோ அவன் ஜீவன் முக்தன். எவனுக்குத் தேகம் முதலானவை யில்லையோ, எவனுக்குப் பிரஹ்மமே என்னும் நிச்சயபாவமுளதோ, எவன் பிரம்மானந்தத்தால் நிறைந்திருப்பவனே அவன் ஜீவன் முக்தன். எவனுக்கு 'நான் பிரஹ்மமாவேன், நான் பிரஹ்மமாவேன், நான் பிரஹ்மமே' எனவும், 'நான் சின்மாத்திரன், நான் சின்மாத்திரன்' எனவும் நிச்சய பாவமுளதோ அவன் ஜீவன் முக்தன்.

ஜீவன் முக்த பதவியை விட்டுத் தன் சரீரம் காலவசமடையும் பொழுது, வாயு சலனரகித மடைந்ததுபோல், விதேக முக்தித் தன்மையடைகிறான்.

அநந்தரம் இச்சாதகன் எதுவாக்குகளுக்கும் கோசர மாகாதோ, எது சூனிய வாதிகளுக்கு சூனியமோ, எது பிரஹ்மவித்துக்களுக்குப் பிரஹ்மமோ, விஞ்ஞானிகளுக்கு விஞ்ஞானமோ, மலினர்களுக்கு மலினவடிவமோ, சாங்கியர்களுக்குப் புருஷனோ, யோகமஸ்தருக்கு ஈசுவரனோ, சைவாகம நிஷ்டர்களுக்குச் சிவனோ, காலகாரண வாதிகளுக்குக் காலமோ, எது சர்வ சாஸ்திர சித்தாந்தமாகிய வஸ்துவோ அதுவாக ஆவான். (இச்சாதகன் இத்தகையதென்று சொல்ல முடியாத வஸ்து எதுவோ அதன் வடிவமாயிருப்பன்.)

எவனால் நான் பிரஹ்மமே யெனவும், நான் சின்மாத்திரனே யெனவும் சிந்திக்கப்படாதோ, எவன் சின்மாத்திரமாகவே யிருப்பானோ அவன் தேக ரகிதனாய் முக்தியடைந்தவனே யாவன். எவனுக்குப் பிரபஞ்சம் தோன்றுவதில்லையோ, இங்குப் பிரஹ்மாகாரத்தையும் பாவித்தலுமில்லையோ, எவன் அதீதத்திற்கும் அதீதமாகிய பாவனையுடையவனோ அவன் தேக ரகிதனாய் முக்தி யடைந்தவனே யாவன். எவன் சித்த விருத்தியினும் அதீதமானவனோ, எவன் சித்த விருத்தியைப் பிரகாசிக்கச் செய்கிறவனாய் சித்த விருத்தி ரகிதனோ அவன் விதேக முக்தனே யாவன். எவன் ஜீவாத்மா வெனவும் பரமாத்மா வெனவும் சர்வ விதமாகிய சிந்தைகளில்லாதவனும், சர்வ சங்கற்பங்களு மில்லாதவனுமவனோ அவன் விதேக முக்தன். எவன் பிரணவவாச்சியத்தினும் அதீதமானவனும், சர்வ சப்தங்களுக்கும் வாச்சியமாகாதவனும் சாக்கிர முதலிய மூன்றவத்தைகளு மின்றியவனுமாவானோ அவன் விதேக முக்தியடைந்தவனே யாவன். பாம்பு தான் உரித்துப்போட்ட தோலைப் பார்த்து 'இது எனது' என்று அபிமானங் கொள்ளுதலின்றி அதனை விட்டு விட்டே போவதுபோல, விதேக முக்தன் தூலசூக்குமங்களென்னும் சரீரங்களையும் என்னுடையவை என்றெண்ணுது விட்டுவிடுகிறான். விபரீத ஞானம் அந்தராத்ம ஞானமென்னும் அக்கினியால் முழுவதும் நசித்தலால் 'இது வல்ல இதுவல்ல' என்னும் வாக்கியத்தால் ரூபமுடைய பதார்த்தங்களனைத்தையும் தானல்லவென்று நிஷேதிப்பதனால் விதேக முக்தி யடைகிறான். தூலசரீராபிமானி சூக்குமசரீராபிமானி காரணசரீராபிமானி என்னும் இம் மூவரும், பிரமாண்டமும், சரீரமும், கிரமமாக பூமிமுதலாகிய உலகமும் தத்தம் உபயாதிலயமடைவதால் அந்தராத்மாவினிடத்து லயமடைகின்றன.

அனந்தரம் மித்தையாகவே யிருக்குமின்றி உண்மையாகக் கிஞ்சித்தும் இல்லை. அந்த விதேக முக்தனுக்கு தேசம் காலம் வஸ்து என்னும் பேதமும், தனக்குப் பேதத்தை யுண்டாக்கும் வேறெவ்வித பேதமுமில்லை. ஜீவன் ஈசுவரன் என்னும் வாக்கியங்களும், வேத சாஸ்திரங்களும், நான் என்றும் இது சித்ரூபமென்றும், நான் சின்மாத்திரனென்றும் கிஞ்சித்து மில்லை. எவன் இத்தகைய நிச்சயமில்லாதவனோ அவன் விதேக முக்தனே.

வாஸ்தவத்தினாலும் அவாஸ்தவத்தினாலும் அனுபவ சித்தமாகிய பிரஹ்மமே யுளது. சத்திய ஞானானந்த ரூபமாகிய பிரஹ்மம் பிரஹ்ம ஞானத்தினால் கோசரமாகும். அந்தப் பிரஹ்மம் சாந்தமெனவும் சர்வாதீத மெனவும் பரப்பிரஹ்ம மெனவும் சொல்லப்படும். சர்வமும் நிஷேதிப்பதே வேதாந்த சாஸ்திரங்களின் சித்தாந்தம். இதில் அவித்தை இல்லை; மாயையுமில்லை; நிர்க்குணமும் நிருபத்திரவமுமாகிய பிரஹ்மமே யுளது. (மாயை அவித்தை இல்லை யென்பதனால் ஜீவேசுவர வேறுபாடு இல்லை யென்பது பெறப்படும்.) மித்திரர்கள் விஷயமாய் உபகாரமும் சத்துருக்கள் விஷயமாய் அபகாரமும்

விடுத்து, தியான யோகத்தினால் சாஸ்வதமாகிய பரப்பிரஹ்மத்தை யடைகிறான். முனீந்திரா! எதுவரை எதுவரை தன்னால் சர்வமும் விட்டு விடப்படுகின்றதோ அதுவரை சுயம் பிரகாசமாகிய பரமாத்மாவே எஞ்சுகின்றது. எப்பொழுதும் பிரஹ்ம வித்தாகிய ஞானி எதனிடத் தெதனிடத்து மிருத்யுவடைவானோ அதனிடத் ததனிடத்து பரப்பிரஹ்மத்தில் லயிப்பானே யன்றி அந்த ஞானிக்குப் பிராணோத்க்ரமணம் இல்லை. எதுவெது தனக்கிஷ்டமாகிய வஸ்துவுண்டோ அதுவெல்லாம் விட்டால் முக்தி யடைகிறான். எப்பொழுது இந்தச் சித்தம் சற்கற்ப ரகிதம் என்னும் சஸ்திரத்தால் பேதிக்கப்படுமோ அப்பொழுது சர்வரூபமும் சர்வமும் பொருந்தி யிருப்பதும் நிர்க்குணமுமாகிய பிரஹ்மமமே யாகிறான்.

இவ்வாறு கூறிய குருவின் வாக்கியத்தைக் கேட்டுச் சீடன் சகல சந்தேகங்களையு மொழித்து, தத்துவத்தை யறிந்து, சற்குருவின் பாதகமலங்களை வணங்கி, அவரால் அனுக்கிரகிக்கப்பட்டவனாய், சம்சாரபந்த ரகிதனாய்ச் சென்றான். குருமூர்த்தியும் பரமானந்த சாகரத்தில் மூழ்கியவராய்த் தன்னையடுத்த முமுட்சுக்களுக்குத் தத்துவார்த்தத்தை யுபதேசித்துக் கொண்டு பூமண்டல முழுதும் சஞ்சரித்துக்கொண் டிருந்தார்.

முமுட்சுக்களுக்குச் சுலபமாய்ப் புலப்படுதற்காக இப்படி குரு சிஷ்ய சம்வாதத்தினால் ஆத்ம சொரூபம் நிரூபிக்கப்பட்டது. சர்வ வேதாந்த சித்தாந்த சார சங்கிரக மென்னும் பெயருள்ள இந்தக் கிரந்தம் சத் புருஷர்களின் சம்சயமென்னும் முடியை நசிக்கச் செய்வித்தற்காக எழுதப்பட்டது. பூஜ்யராகிய ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகளால் ஆதரித்து வரையப்பட்ட இந்நூல் முமுட்சுக்களால் எப்பொழுதும் கேட்கத் தக்கதும் பார்க்கத் தக்கதும் படிக்கத் தக்கதுமாம். ஓம் தத் சத்.

முற்றிற்று.

---

பின்னுரை:—அன்பார்ந்த நேயர்களே! இந்நூல் யாதொரு விதத்திலும் இடையூறு இன்றி இனிது முடியுமாறு கிருபை புரிந்த எமது உபாசன மூர்த்தியின் திருவருளைச் சிந்தித்து இறைஞ்சுகின்றோம். உபாசன மூர்த்தியின் அனுக்கிரகத்தாலும் பெரியோர்களின் ஆசீர்வாதத்தினாலும் எம்மால் எழுதப்பட்டுவந்த இந்நூலை மனங்கோணாது பொறுமையுடன் வாசித்து வந்த உங்களுக்கு எம்மனமார்ந்த வந்தனம் உரியதாகுக. பலவிடங்களினின்று இந்நூல் விஷயமாகப் பலர் வாழ்த்துதல்களையும் ஐயங்களையும் அடிக்கடி தெரிவித்து எமக்கு மிக்க உற்சாகத்தை யளித்து வந்தனர். சில நண்பர்கள் விடுத்த ஐயவினாக்களுக்கு விடை யிறுப்பதன் முன்னர் (சமீப காலத்தில் வந்தவை) கிரந்தம் முடிவு பெற்றதாயினும் அவர்களுக்குக் கூடிய விரைவில் விடைகள் அவர்கள் கேட்டுக் கொண்டவாறே கடித மூலமாயறிவிக்கப்படும் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறோம். இனி, அடுத்தபடியாகச் சில அன்பர்கள் கோரிக்கையின்படி வேதாந்த சூடாமணி விவேக சூடாமணி என்னுமிவற்றி லொன்றினை எளிய வசன நடையில் எழுத உத்தேசித்திருக்கிறோம். கடைசியாக, இவ்வளவிற்கும் காரணமாக விருக்கும் "ஆனந்தபோதினி" யும் அதன் ஆசிரியர் திருவாளர் நா. முனிசாமி முதலியாரவர்களும் நீடூழி வாழக் கிருபை செய்யுமாறு உபாசன மூர்த்தியை இறைஞ்சி இனிது முடிக்கின்றோம். நம் நாடு வாழ்க. நம் மதம் வாழ்க. ஆனந்தன் வாசகர்கள் வாழ்க. சுபம். ஓம் தத் சத்.

# ஓர் போர்வீரனது தேசபக்தி

(சுதாரத்ன கே. கிருஷ்ணசாமி சர்மா.)

முன் காலத்தில் ரோமாபுரி இத்தாலிதேசத்தில் இருந்த பல இராஜதானி நகரங்களைவிடச் சிறந்து புகழ்பெற்றதாகும். அக்காலத்தில் எந்தத்தேசத்திலும் இராஜதானிகள் மாத்திரம் சிறந்து விளங்கிவந்தன. நமது போர்வீரனது காலத்தில் ரோம் நகரம் தன்னைச் சுற்றியுள்ள இராஜதானிகளை அடக்கி ஆண்டுவந்தது. அதன் பலனாகப் பிற ராஜதானிகளின் அதிகாரிகள் ரோம்மீது வெறுப்படைந்து அதன் ஆளுகையைத் தொலைக்க வேண்டுமென்று உறுதிகொண்டிருந்தனர். இங்ஙனம் ஒருவருக் கொருவர் துணையாய் ஆலோசித்துக் கொண்டு ஓர் ஏற்பாடு செய்துகொண்டு அதன்படி நடந்து ரோமுடன் போர்புரிய நிச்சயித்தனர். சின்னாட்களுக்குள் திரள் திரளாய் ரோமாபுரியை விரோதிகளின் படைகள் சூழ்ந்து கொண்டன. அவரே லாடின் என்னும் வகுப்பைச் சேர்ந்தவர். ரோமா புரியோர் படைகளும் ஆரவாரத்துடன் புறப்பட்டன.

ரோமன் படைத்தலைவ ரிருவர். அவர்களைக் கான்சலென்பர். அவ் விருவரும் சிறந்த வீரரெனப் புகழ்பெற்றவர். ஒருவர் பெயர் 'டிடஸ் மானிலீஸ்' இவருக்கு 'டார்க்வெடஸ்' என்றும் மற்றோர் பெயருண்டு. டார்க்வெடஸ் என்பது ஓர் பெயராகும். அதாவது சிறப்புக்காகக் கிடைத்த இவர் 'கால்ஸ்' என்னும் வகுப்பைச் சேர்ந்த ஓர் கியாதிபெற்ற வீரனை எதிர்த்து வென்று அவனது மார்பி லணிந்திருந்த 'டார்க்' என்னும் பொன் வளையத்தை தான் வென்றதற் கறிகுறியாக அணிந்து வந்தார் என்பதேயாம். மற்றொருவர் 'பப்ளியஸ் டெஸியஸ்மஸ்' என்பவர். இவர் தமது வீரத்தன்மையால் பலபோர்க்களத்தில் விஜயம்பெற்று புகழ்பெற்றிருந்தார். இவ்விரு வீரர்களும் தமது சேனைகளைப் போர்க்களமாகிய 'விஸ்யூவியஸ்' மலை அடிவாரத்திற்கு நடப்பித்தார்கள்.

அக்காலத்தில் அந்நாட்டாரும் நம்மைப்போலவே மரண மடைந்தவர் சூக்கும சரீரம்பெற்று மேலுலகம் செல்கிறாரென்னும் நம்பிக்கை கொண்ருந்தனர். தென்புலத்தாரை (பிதுர்க்களை) அவர் 'தேயிமானிஸ்' என்றழைப்பர். தேவர்களுக்கும், மானிடர்களுக்கும், மத்திய ஸ்தலத்திலுள்ளவரென்பது அவர்களின் கருத்து. ஆனால் அவரது பிதுர்லோகம் மேலுலக மல்லாது கீழுலக மெனக் கருதி வந்தனர். அவ்வுலகம் இந்த 'விஸ்யூவியஸ்' என்னும் மலையடிவாரத்தி லிருப்பதாக அவர்களுடைய நம்பிக்கை. இவர் சேனைகள் தங்கிய இடத்திலேயே அஃதிருந்ததென்றும் கருதி வந்தனர். இதல்லாது அன்றிரவு வீரர்களிருவரும் ஓர் கனவு கண்டனர். அதில் ஓர் பூதம் தோன்றியது. அப்பூதம் உடல் முழுமையும் வஸ்திரத்தால் மூடிக்கொண்டு இங்ஙனம் கூறிற்று: "ரோமாபுரி அரசன் தென் புலத்தாரைத் திருப்தி செய்வாராகில் 'லாடினரை'த் தோல்வி பெறச் செய்வர். அங்ஙன மில்லாது

லாடினர் திருப்தி செய்வாராகில் ரோமாபுரி சேனைகள் தோல்விபெற வேண்டியதே.'' இதன் கருத்தென்னே? சம்பூரண மனதுடன் தேசத்தின் பொருட்டு பிராணத்தியாகம் செய்வதேயாகும்.

மறுநாள் இருவரும் சேர்ந்தபோழ்து இரவு நடந்த கனவுகளைக் குறித்து பேசிக்கொண்டனர். தேவதை கூறியவாறே நடந்துகொள்ள இருவரும் முன் வந்தனர். எவர் சேனைகள்மீது லாடினர் முன்வந்து கடின போர் புரிகிறார்களோ, அத்தலைவர் தேவதையின் பிரீதியாய் பிராணத்தியாகம் செய்ய வேண்டுமென்று நிச்சயம் செய்துகொண்டனர். மறுநாள் போர் நிகழ்ந்தது. இரு சேனைகளும் கோர யுத்தம் செய்தன. டெஷியஸ் தலைமை வகித்துள்ள பாகத்தை லாடினர் எதிர்த்து சேனைகளைத் துரத்தத் தலைப்பட்டனர். அப்பொழுது, தேவதையின் பிரீதியின் பொருட்டு பலியாக வேண்டிய தருணம் நேர்ந்ததென டெஷியஸ் அறிந்தார். உடனே மதாசாரியை வரவழைத்தார். அவர் பெயர் 'பான்டிபெக்ஸு மாக்ஷிமஸ்.' மதாசாரத்தின்படி விதிகளைப் பெற்று தேவதைக்குத் தன்னைச் சமர்ப்பித்துக் கொண்டனர். உடனே அவ்வீரர் ஆவேசத்துடன் எதிரிகளின்மீது பாய்ந்தார். அவரைக்கண்ட சத்துருக்கள் நடுக்கங் கொண்டனர். முடிவில் டெஷியஸ் வீரமரணத்தை அடைந்தார். அதனைக் கண்ட படைகளும், தலைவர்களும் வீராவேசத்துடன் எதிரிகளை எதிர்த்துப் போர்புரிந்து அவர்களை வென்றனர். டெஷியஸ் மரண சங்கதியைக் கேட்டு மற்றொரு தலைவராகிய மானிலாஸ் டெஷியை புகழ்ந்து துதித்தார். அப்பேரானந்தம் தமக்குக் கிடைக்கவில்லையே என்றும் மனமிரங்கினர். தேசத்தின் பொருட்டுப் பிராணத்தியாகம் செய்த இவரது வீரத்தன்மை புகழத் தக்கதன்றோ?

# சங்கீதம்.

(ரா. ம. வே. சுப்பிரமணிய சாஸ்திரிகள்.)

ப்ரஹ்மக்ரந்திஜ மாருதாநுகதிநா சித்தேந ஹ்ருத்பங்கஜே
ஸூரீணமநுரஞ் ஜகச்ருதிபதம் யோயம் ஸ்வயம் ராஜதே
யஸ்மாத் க்ராமவிபாகவர்ண ரசநாலங்கார ஜாதிக்ரமோ
வந்தேநாததநும் தமுத்தராஜகத்கீதம் முதேசங்கரம்"

சங்கீதரத்னாகரம்.

இந்தச் சங்கீத வித்தையானது பற்பல மஹான்களால் புத்திசாதுரியத்தினால் செய்யப்பட்ட பற்பல கிரந்தங்களால் பிரபலமாயிற்று. அங்ஙனம் இந்தச் சங்கீதத்தை விருத்தியாக்கியவர்கள் அநேகம் பேர் உண்டு.

ஸதாசிவ: சிவாப்ரஹ்மா பரத: கச்யபோமுநி:
மதங்கோயாஷ்டிகோ துர்கா சக்தி: சார்தூலகோஹலௌ.
விசாகிலோ தந்திலஸ்ச கம்பளோச்வ தரஸ்ததா,
வாயுர்விச்வாசூரம்பார் ஜுநநாரத தும்புரா:
ஆஞ்ஜநேயோ மாத்ருகுப்தோ ராவணோ நந்திகேச்வர:
ஸ்வாதிர்குணோபிந்துராஜ: க்ஷேத்ரராஜஸ் சராஹுல:
ருத்ரடோ நாந்யபூபாலோ: போஜபூவல்லபஸ்ததா:
பரமர்தீசஸோமேசோ: ஜகதேக மஹீபதி:

சங்கீதரத்னாகரம்.

சதாசிவன், சிவன், பிரம்மா, பரதர், கச்யபர், மதங்கர், யாஷ்டிகர், துர்க்கை, சக்தி, சார்த்தூலர், கோஹலர், விசாகிலர், தந்திலர், கம்பளர், அச்வதரர், வாயு, விச்வாசு, ரம்பை, அர்ஜுனன், நாரதர், தும்புரு, ஆஞ்ஜநேயர், மாதுருகுப்தர், ராவணன், நந்திகேசுவரர், பிந்துராஜன், க்ஷேத்ரராஜன், ராஹுலர், ருத்ரடர் முதலியவர்களும், நாந்யபூபாலர், போஜபூவல்லபர், பரமர்தீ ஸோமேசபூபாலர் முதலிய அரசர்களும் லோல்லடர், உத்படர், சங்குகர், பட்டாபிநவகுப்தர், கீர்த்திதரர் முதலிய வ்யாக்யாதாக்களும் சங்கீதத்தை விருத்தி செய்தவர்களுள் முக்கியஸ்தராவார்கள்.

## சங்கீத சப்தார்த்தம்

சங்கீதமென்ற சப்தத்துக்கு நல்லகானம் மட்டிலும் பொருளென்று சிலர் அபிப்பிராயப் படுகிறார்கள். "ரஞ்ஜகஸ்வர ஸந்தர்ப்பௌ கீதமித்யபிதீயதே" அதாவது ஸ்வரங்களுடைய பிரயோகங்களில் மனதை ரஞ்ஜிக்கச் செய்வது கீதமென்று சொல்லப்படுகிறதென்ற விசேஷ வசனத்தால் சம் என்ற உபஸர்

க்கமில்லாமல் கீதம் என்ற சப்தத்துக்கே நல்லகீதமென்று பொருள் சித்திக் கிறபடியால் ஸம் என்ற உபஸர்க்கமானது கீத சப்தத்தோடு கூடினதாய் கீதத்தின் அங்யஸம்பந்தத்தை வெளியிடுகிறதாகக் கொண்டு வாத்தியத்தி னுடையவும் நிருத்தியத்தினுடைய ஸம்பந்தத்தைத் தெரிவிக்கிறதாகையால்.

கீதம் வாத்யம் ததாந்ருத்யம் த்ரயம் சங்கீத மூச்யதே

என்ற சங்கீதரத்னகர ஸ்லோகப்படி கீதம், வாத்யம், நிருத்யம் ஆகிய மூன் றும் சங்கீதமென்று சொல்லப்படுகின்றன.

இந்த லக்ஷணத்தில் நடனமும் சேர்ந்திருப்பதால் சங்கீத சப்தத்துக்குப் பொருத்தமான பொருளாகவே இருக்கிறது. இம்மூன்றுக்கும் தௌர்ய த்ரிகமென்றும் பெயர்.

"கீதவாத்யோ பயம்யத்ர சங்கீதமிதிகேசந :"

அதாவது கீதம், வாத்யம், ஆகிய இரண்டுமே சங்கீதமென்று சிலர் சொல்லு கிறார்கள்.

"ராகஸ்வரஸ் ததா தாளஸ்த்ரிபிஸ்ஸங்கீத மூச்யதே"

அதாவது ராகம், ஸ்வரம், தாளம் இம்மூன்றும் சேர்ந்தபடியால் சங்கீத மெனப்படுமென்றும் சிலர் சொல்லுகிறார்கள்.

இந்த லக்ஷணங்களும் பாடகர்களுக்கு மிகவும் அவசியமானதா யிருப்ப தால் இதுவும் சங்கீத சப்தத்துக்குப் பொருத்தமான பொருள்தான். ஆகை யால் கீதம், வாத்யம், நிருத்யம், ராகம், ஸ்வரம், தாளம் இவைகளோடு மனதை ரஞ்சிக்கச்செய்வது சங்கீதமென்று சொல்லப்படுகிறது.

(தொடரும்.)

### மதுசாரம் மூளைக்கு உற்சாகமா?

"என்னைப் பொறுத்தவரை மது அருந்துவதைவிட விஷத்தைக் குடித்துவிடுவேன். விஷத்தைவிட மது அபாய கரமானது என்று தயங்காமல் கூறுவேன். ஏனெனில் விஷம் மதுவைப்போல் சன்மார்க்கத் தவறுதலுக்குக் காரண மாயிருப்பதில்லை. வெறியினால் நீசத்தனம்படைத்து அநேக நாள் கஷ்டப்பட்டுச் சாவதைவிட உடனே செத்துப்போதல் எவ்வளவோ மேலல்லவா?"—தாமஸ் ஹக்ஸ்லி.

"துஞ்சினார் செத்தாரின் வேறல்லார் எஞ்ஞான்றும்
நஞ்சுண்பார் கள்ளுண் பவர்"—வள்ளுவர்.

— வேதாந்த —

# ஐய வினாவும் விடையும்.

(170-ம் பக்கத் தொடர்ச்சி.)

(தமிழ்ப் பண்டிதர் பூ. ஸ்ரீனிவாசன் எழுதியது.)

## மகாவாக்கியத்தில் லக்ஷணையி னுபயோகம்

வேதமானது சோபானக்கிரகத்தில் முதலில் கர்மத்தையும், இரண்டாவ தாக உபாசனை அல்லது பக்தியையும், முடிவில் ஞானத்தையும் புகட்டு கின்றது. முடிவாக நாம் அடையவேண்டிய—அடைந்தே தீரவேண்டிய நிலை அதுவே, இதனை 'விரும்பும் சரியை முதல் மெய்ஞ்ஞான மொரு நான் கும், அரும்புமலர் காய் கனிபோ லன்றோ பராபரமே,' எனவும், 'பத்தி நெறிநிலை நின்றும்' என்று தொடங்கும் பாடலில் 'ஞானமலது கதி கூடுமோ' எனவும் கூறிப்போந்தார் தாயுமான சுவாமிகள். ஆகையால், வேத முடிவு அல்லது அந்தம் ஞானபாகமாம். அந்த ஞான மின்ன தென்பதை உணர்த்த இருக்கு எசுர் சாமம் அதர்வணம் என்னும் நான்கு வேதங்களும் நான்கு வாக்கியங்களால் அதனை உணர்த்தின. அது பற்றியே அவை (நான்கு வாக்கியங்கள்) மகாவாக்கியம் எனப் படுகின்றன. அவை சித் தார்த்தபோதக வாக்கிய மெனவும் படும். அதாவது, விதிநிஷேதங்க ளின்றிச் சர்வசித்தமாக எப்பொழுதும் பெறப்பட்ட பொருளாகிய பிரஹ் மாத்ம ஐக்கியத்தைப் போதிக்கும் வாக்கியமாம். மற்றையவை விதி நிஷேத வாக்கியங்கள்.

(1) பிரஞ்ஞானம் (இருக்கு வேதம்). (2) அகம் பிரஹ்மாஸ்மி (யசுர் வேதம்). (3) தத்துவமசி (சாமவேதம்). (4) அயமாத்மா பிரஹ்மம் (அதர் வண வேதம்) என்னும் மகாவாக்கியங்கள் நான்கனுள் உபதேச வாக்கியமா யிருத்தலின் தத்துவமசி மகாவாக்கியமே எல்லா நூல்களிலும் பிரதி பாதிக் கப்படுகின்றது.

இவ்வாக்கியம் 'தத்' 'துவம்' 'அசி' எனும் முப்பதங்களா லாயது. இவற் றுள் 'தத்' என்பதற்கு 'அது' என்பதும், 'துவம்' என்பதற்கு 'நீ' என்பதும், 'அசி' என்பதற்கு 'இருக்கிறாய்' என்பதும் பொருளாம். எனவே 'அது நீயா யிருக்கிறாய்' என்பது திரண்ட பொருளாம். இதில் 'அது' என்பது ஈசுவரனையும் 'நீ' என்பது ஜீவனையும் குறிக்கும். ஆகவே, 'ஈசுவரன் நீயா யிருக்கிறாய்' என்று மகாவாக்கியத்திற்குப் பொருள் கொள்ளக் கிடக்கின்றது. இது வாச்சியார்த்தம். ஆனால் இது பொருந்தாது. எனெனின்; ஈசுவரனும் ஜீவனும் ஒன்று எனச் சொல்லக்கூடாது; ஒருவர்க் கொருவர் விரோத தரும முடையவராகலின். எங்ஙனமெனின்; ஈசுவரன் மாயையைச் சுவாதீனமாக வுடையவர். அதனால் சுதந்திரராயும் தன்னை யறிந்துகொண் டிருப்பவ ராயும் சர்வவல்லமையும் பேரறிவும் வியாபகமு முள்ளவராயும் பந்தமோக்ஷங்க ளின்றியவராயு மிருப்பவர்; ஜீவன் அவித்தையின் வசப்பட்டவனும் அதனால்

பராதீனனாயும் சிற்றறிவும் சிறுதொழிலுமுடையவனாயு மிருப்பவன். இவ்வாறு பரஸ்பரம் மாறுபட்ட தருமமுடைய இவ்விருவரும் ஒன்றெனக் கூறுதல் ஒளியும் இருளும் ஒன்றெனக் கூறுதல் போலாம்; ஆகையால் 'அது நீயா யிருக்கிறாய்' என்னும் வாக்கியம் பொருத்த முடையதாகாது. ஆனால் வேதமோ பொய் புகலாது. அதுபற்றி லக்ஷணையால் பொருள் கொள்ளின் பொருந்தும்.

'அது' என்பதற்கு பிரஹ்மம் என்று பொருள் கொள்ளின் பொருந்து கின்றது. ஆயின், ஏன் அவ்வாறு கொள்ளலாகா தெனின்; அவ்வாக்கியம் ஈசுவரனைச் சுட்டி யெழுந்தது. எவ்வாறெனின்: சுவேதகேது என்னும் முனி புத்திரன் தன் தந்தையாகிய உத்தாலகரை நோக்கி, 'இவ்வித விசித்திரமாகிய உலகம் யாரால் படைக்கப்பட்டது?' எனக் கேட்டபோது, உத்தாலகர் 'இவ்வுலகத்தைச் சிருஷ்டித்த அது நீயா யிருக்கிறாய். (தத்துவமசி)' என்றார். ஆகவே, தத் என்பதற்கு ஈசுவரனையே கொள்ளவேண்டும்.

இங்கு, மாயை, மாயையிலுள்ள ஆபாசன், அதன் (மாயையின்) அதிஷ்டான சேதனம் இம் மூன்றும் சேர்ந்தது ஈசுவரன் என்றும், அவித்தை, அதின் ஆபாசம், அதின் அதிஷ்டான சேதனம் இம்மூன்றும் சேர்ந்தது ஜீவன் என்றும் ஈசுவர ஜீவ லக்ஷணம் கூறப்படுகின்றது. இவ்விரண்டி னுள்ளும் மாயை அவித்தை, அவற்றாலுண்டாம் சர்வசக்தி அற்பசக்தி முதலிய தர்மங்கள் இவைகளே விரோதாமிசங்கள். இரண்டின் சேதனத்தில் விரோதமின்று. ஆதலின் விரோத பாகங்களைவிட்டு அவிரோத பாகத்தை மட்டும் கொள்ளின் ஈசுவர சேதனமும் ஜீவ சேதனமும் ஒன்றே யாகலின் 'அது நீயா யிருக்கிறாய்' என்னும் வாக்கியம் பொருத்த முடையதாகும். இவ்வாறு ஒரு பாகத்தைவிட்டு மற்றொரு பாகத்தை எடுத்துக் கொள்ளுதற்கே பாகத்தியாக லட்சணை அல்லது விட்டுவிடாத லக்ஷணை யென்று பெயர். ஏனை இரண்டு லட்சணைகள் பொருந்துதலில்லை. இதன் விவரத்தை என்னால் எழுதப்பட்ட 'ஞான சூரியோதயம் என்னும் வேதாந்த இரகசியார்த்த விடை'யில் உள்ளபடி காட்டினால் இனிது விளங்குமாகலின் அதனை அப்படியே எழுதி விடுகின்றேன்.

## விட்ட லட்சணையால் அர்த்தம் சம்பவியாமை

"விட்ட லட்சணையில் வாச்சியம் முழுதும் விடுபட்டு அதன் சம்பந்தியான வேறு பொருள் கிரகிக்கப்படுகின்றது. அதன்படி மகாவாக்கியத்திலும் வாச்சிய பாகம் முழுதும் விடுபட்டு வேறு பொருள் கிரகிக்கப்படல் வேண்டும். அவ்வாறு கிரகிப்பதாயின் அவ்வாச்சி யார்த்தத்தினும் வேறான சூனியம் கிரகிக்கப்பட வேண்டியதாகும். ஆதலின், விட்ட லட்சணையால் அர்த்தம் சம்பவியாது.

## விடாத லட்சணையால் அர்த்தம் சம்பவியாமை

விடாத லட்சணையில் வாச்சியார்த்தம் விடுபடாமல் அதிகமான ஒரு பொருளும் கிரகிக்கப்படுகின்றது. அதன்படி மகாவாக்கியத்திலும் வாச்சிய பாகம் முழுதும் இருத்தல் வேண்டும். ஆனால் வாச்சியபாகம் விரோதத் தன்மையுடையதா யிருக்கின்றது. ஆதலால் அதனை முழுதும் விடாதிருத்தலால் விரோதம் நீங்காது. அன்றியும் அதிகப்பொருள் கிரகிக்கப்பட வேண்டுமானால் பிரஹ்மத்தினும் வேறான பொருளைச் சேர்த்தல் வேண்டும். அதுவும் அசங்கதம். இவ்வாற்றால் விடாத லட்சணையாலும் பொருள் கிரகிக்கப்படாது.

## விட்டுவிடாத லட்சணையால் அர்த்த சம்பவம்

வாச்சியத்திலுள்ள விரோத பாகத்தைவிட்டு விரோதமில்லாத பாகத்தைக் கொள்ளுதல் விட்டுவிடாத லட்சணையாம் என்பது முன்னர் கூறப்பட்டது. அதன்படி, ஆபாச சகிதமாயையும் அவித்தையும் மகாவாச்சியத்தில் விரோத பாகமாதலின் அவ்விரண்டையும் நீக்கி, விரோதமின்றிய பாகமாகிய சேதனத்தைக் கொள்ளல் வேண்டும். அங்ஙனம் கொள்ளுமிடத்துக் கடாகாச மகா காசங்களுக்கு அபேத மிருத்தல்போல, ஜீவ சாட்சியாகிய கூடஸ்தனும் ஈசுவர சாட்சியாகிய சேதனமும் ஒன்றே என்பது பெறப்படும். இதுவே தத்துவமசி மகாவாக்கியத்தின் பொருளாம்.'' (ஞான சூரியோதம் என்னும் வேதாந்த இரகசியார்த்த வினாவிடை பக்கம் 144-145.)

இதுவே மகா வாக்கியத்தின் பொருள் என்பது சிதையாத சித்தாந்தமாம். இனி, இவ்வியாசம் எழுதுவதற்குக் காரணரா யிருந்த நண்பர் இரண்டாவதாக எழுதிய நிருபத்தில் பின்வருமாறு எழுதுகிறார். 'ஒருவர் குடும்பத்தி லிருப்பதுதான் விட்டலட்சணை என்கிறார். ஒருவர் சந்யாசியாக இருப்பது தான் விட்ட லட்சணை என்கிறார். சஞ்சித பிராரப்த ஆகாமிய கர்மங்கள் தான் விட்ட லட்சணை விடாத லட்சணை விட்டுவிடாத லட்சணை என்பது என்கிறார் ஒருவர். இன்னும் பலமாதிரி அபிப்பிராயம் சொல்லுகின்றனர். இந்த அடிமை என்ன செய்வது; எல்லாம் சரிசரி என்று தங்கள் அபிப்பிராயத்தை எதிர் பார்த்துக்கொண் டிருக்கிறது. ஆகலின், விபரமாகப் பத்திரிகை வாயிலாக எழுதி யனுப்புவீர்களென்று நம்புகிறேன்.''

நண்பர் கூறுவதுபோல் பேசும் வேதாந்திகளும் சிலர் இருக்கின்றனரென்பது உண்மையே யென்பதை வருத்தத்தோடு தெரிவிக்கவேண்டியிருக்கிறது. அவர்கள் கூற்றிற்கும் லட்சணைக்கும் யாதொரு சம்பந்தமுமில்லை. இவைகள் வெறும் குயுக்தி அர்த்தங்களேயாம். இத்தகைய குயுக்தி வார்த்தைகளைக் கண்டு யாரும் மயங்கிவிடலாகாது. எனக்குத் தெரிந்த வேதாந்தி யொருவர் ஓரிடத்தில் பேசிக்கொண் டிருந்தபோது,

> வாக்குண்டாம் நல்ல மனமுண்டாம் மாமலராள்
> நோக்குண்டாம் மேனி நுடங்காது—பூக்கொண்டு
> துப்பார் திருமேனி தும்பிக்கை யான்பாதம்
> தப்பாமற் சார்வார் தமக்கு.

என்னும் செய்யுளைக் கூறி, திருமேனி என்றதற்கு குப்பைமேனிச் செடி எனப் பொருள் கொண்டு, 'பரிசுத்தமாகிய குப்பைமேனி என்னும் செடியின் வேரைத் தப்பாமல் சேர்ப்பவர்க்கு வாக்குண்டாம் நல்ல மனமுண்டாம் * * எனக்கூறி முடித்தார். குப்பைமேனிச் செடி மிக்கச் சிறப்புடையதா யிருக்கலாம். ஆனால் விநாயகர் துதியாகக் கூறப்பட்டுள்ள 'வாக்குண்டாம்' செய்யுளுக்கும் அதற்கும் என்ன சம்பந்தம்! அவர்களும் இவரிடத்தில் சேர்ந்தவர் தான். சுருங்கக் கூறுமிடத்து இவ் விபரீதங்களெல்லாம் தக்க பெரியாரிடத்து வேதாந்தப் பயிற்சி பெறாமையா லுண்டாகின்றவையேயாம். இத்துடன் விஷயத்தை முடித்துக் கொள்ளுகிறேன். எவ்வளவு எழுதவேண்டுமோ அவ்வளவையும் எழுதிவிட்டேனென் றெண்ணுகிறேன். ஆனால் வாசகர்களுக்கு இதனால் எவ்வளவு பயனுண்டாகுமோ அறியேன். எல்லாம் வல்ல இறைவன் நற்பயனளிக்குமாறு இறைஞ்சுகின்றேன்.

ஓம். தத். சத்.

# "சின்ன கலாட்டா"

(பண்டித - லி. ராமசாமி.)

"எனக்கு ரூபாய் வேணும் கொடுக்கிறீர்களா?"

"எனக்குந்தான் வேணும். இரண்டு ரூபாய் கொடுத்தாயானால் ஒன்று உனக்குக் கொடுத்துவிட்டு ஒன்று நான் செலவு செய்து கொள்ளுவேன்."

"நான் கொடுக்கிறதா யிருந்தால் உங்களை ஏன் கேட்கணும்?" என்றாள் முகம் சுளித்துக்கொண்டு. கொஞ்சநேரம் சும்மா இருந்துவிட்டு மறுபடியும்

"என்ன! ரூபாய் கொடுக்கமாட்டீர்கள்?"

"என்னிடம் இல்லை."

"இல்லாமலே போகவேணும். நேற்றுத்தானே சம்பளம் வந்தது."

"நேற்றுச் சம்பளம் வந்தால் இன்றைக்கு இருக்கவேணும் என்பது என்ன கட்டாயம்?"

"சரி! சரி!! இல்லாமற்போனால் போகட்டும்."

மறுபடியும் முகம் சுண்டிக் கோபக்குறி காட்டுகிறது.

"என்னத்திற்காகச் சொல்லு. அவசியம் என்று எனக்குத் தெரிந்தால் கொடுக்கிறேன்."

"வேணும்"

"சும்மா வேணும் என்றால்? பணம் வேண்டாதவர்கள் யார்?"

"கொடுக்கிறேன் என்றால் சொல்லுகிறேன்."

"கண்டிஷனா? முதலிலேயே சொல்லிவிட உனக்கு இஷ்டம் இருந்தால் சொல்லு; இல்லாதபோனால் வேண்டாம்."

"சரிதான் போங்கள்! எப்போதும் இப்படித்தான்."

"என்ன எப்போதும் இப்படித்தான்? உனக்கு மாத்திரம் இவ்வளவு பிடிவாதம் என்ன?"

"பிடிவாதம் ஒன்றுமில்லை. சொல்லுகிறேன், கொடுக்கிறீர்களா?

"முதலில் சொல்லு. கொடுக்கிறதும் கொடுக்காததும் பிறகு சொல்லுகிறேன்."

"உல்லன் நூல் வாங்கி கொஞ்சம் கொஞ்சமாகப் பின்னல் கற்றுக்கொள்ளப் போகிறேன்.

"அப்படியா? கற்றுக் கொடுக்கிறது யார்?"

"யாரோ இன்ஸ்பெக்டர் சம்சாரமாம். நேற்று அவர்கள் வீட்டிற்குப் போயிருந்தேன். அந்தம்மா பின்னுவது எவ்வளவு அழகாய் இருக்கிறது என்கிறீர்கள்? எனக்கும் கற்றுக்கொடுப்பதாகச் சொன்னாள்."

"சரி. உன்னிஷ்டம்! கற்றுக்கொள்."

"கற்றுக் கொள்ளுகிறேன். ரூபாய் கொடுங்கள்."

"என்னிடம் இல்லை."

"கொடுக்கிறேன் என்றீர்களே."

"நானு?"

"இப்பத்தானே கற்றுக்கொள்ளச் சொன்னீர்கள்!"

"கற்றுக்கொள்ளச் சொன்னேன். என்னிடம் பணந்தான் இல்லை. அதிலும் கற்றுக்கொள்ளுவதும் கற்றுக்கொள்ளாததும் உன்னிஷ்டமே யொழிய என்னிஷ்டம் இல்லை."

"இஷ்டம் என்ன வந்தது? கற்றுக்கொள்ளச் சொன்னால் கற்றுக் கொள்ளுகிறேன். இல்லை என்றால் போகிறது."

"ஆஹா! என்ன ஒழுங்கு. கற்றுக்கொள்ளச் சொன்னதெல்லாம் கற்றுக் கொண்டு விட்டாய். இதுதான் பாக்கி. ராட்டினத்தில நூல் நூற்றுப் பழகச் சொன்னேன். ஏதோ கொஞ்சம் நன்றாக எழுதப் படிக்கத் தெரிந்துகொள் என்றேன் எல்லாம் வந்துவிட்டது!"

"சரி! இனிமேல் எல்லாம் தெரிந்து கொள்ளுகிறேன்."

"வந்த ஒரு வருஷமாகக் கிளிப் பிள்ளைக்குச் சொன்ன மாதிரி சொன்னேனே கொஞ்சமாவது காதில் போட்டுக்கொண்டாயா?"

"இப்படிக் கோபித்துக் கொண்டால் என்ன செய்கிறது. பின்னலோடு நீங்கள் சொன்னதையும ஆரம்பிக்கிறேன். ரூபாய் கொடுங்கள்."

"என்னிடம் இல்லை. நீ ஆரம்பித்தாலும் சரி, சும்மா இருந்தாலும் சரி."

"கொடுக்கமாட்டீர்கள்?"

"................................."

"என்ன?"

"இல்லை! இல்லை!! இல்லை!!!"

இவ்வளவு நேரம் அவருடைய பக்கத்திலேயே உட்கார்ந்து புஜத்தின் மீது தலையை வைத்துப் பேசிக்கொண்டிருந்த குஞ்சம்மாள் எழுந்து,

"இல்லை என்றால் வெகு நல்ல காரியமாயிற்று. ஒரு சல்லிக் காசுக்குக் கூட உங்களையே தொங்கிக்கொண்டு இருப்பதினால் அல்லவா உங்களுக்கு இவ்வளவு கிராக்கி. நீங்கள் கொடுக்கவே வேண்டாம்" என்று சொல்லிவிட்டு கதவோடு சேர்ந்து வேறு பக்கம் பார்த்துக்கொண்டு நின்றாள்.

"ஐயோ பாவம்! எல்லாம் உங்கள் வீட்டிலிருந்தே கொண்டுவராமல் என்னைய நம்பிக்கொண்டு இருப்பானேன்? நான் கொடுக்கப்போகிறதோ கிடையாது."

குஞ்சம்மாள் மறுபடியும் பக்கத்தில் வந்து உட்கார்ந்து, "ஒரு ரூபாய் கொடுங்கள். இனிமேல் கேட்கிறதே இல்லை."

"இல்லை. நான் கொடுக்கமாட்டேன். உங்கள் வீட்டிலிருந்து கொண்டு வராமல் ஏமாந்து போய்விட்டாயே. உன் இஷ்டபபடி செலவு செய்து கொள்ளலாம் பார்."

"ஆமாம் போங்கள். எங்கள் வீட்டில் கொடுக்கிறவர்களாய் என்னைச் சரியாகக் கவனித்தால் நீங்கள் இப்படிச் சொல்ல வருவீர்களா? நீங்களே வைத்துக் கொள்ளுங்கள் உங்கள் ரூபாயை" என்று சொல்லிக்கொண்டு

எழுந்து புறப்பட்டுப்போக ஆரம்பித்தாள். வாஸ்தவத்திலேயே கோபம் பலமாக வந்துவிட்டது. துக்கமும் கலந்துவிட்டதாகப் பிறகு பேசிய பேச்சுக்களால் தெரிய வந்தது.

"இந்தா இங்கே வா" என்றார் முத்துசாமி பிள்ளை.

"எனக்குத் தேவை இல்லை" என்று புறப்பட்டுப் போனாள்.

*  *  *  *  *

முத்துசாமி பிள்ளை இப்போது பாவப் பிரபஞ்சத்தில் சஞ்சரிக்கிறார். சதா சர்வ காலமும் மனோராஜ்யம்தான் இவருடைய மணியம். தூங்காமலே கனவுகள் காண்கிறார். காதல் இன்பம் எந்தவிதத்தில் சுகமாக அநுபவிக்கிறது என்று ஆலோசிக்கிறதைத் தவிர அவருக்கு வேறு வேலையில் மனம் செல்லுவதில்லை. அவருடைய மனைவி அவருக்கு தெவிட்டா அமிர்தம், காதல் சொரூபம். காதலி தன்னை நன்றாக அறிந்துகொள்ளவில்லையே என்ற விசாரம் அவருக்குக் கொஞ்சம் உண்டு.

மத்தியானம் நடந்த சின்ன மனத்தாங்கலுக்கு அவருடைய மனம் மிகவும் பரிதபித்துக்கொண்டிருந்தது. வீட்டுக்கு வரும்போது வழியில் அவருடைய மனதில் எத்தனையோ எண்ணங்கள் ஓடிக்கொண்டிருந்தன. தாமதத்தால் சாப்பாட்டு நேரங்கூட மீறிவிட்டது. அவர் வீட்டுக்குள் போனவுடனே குஞ்சம்மாள் "சாப்பாட்டுக்கு வர இவ்வளவு தாமதம் என்ன?" என்றுகூடக் கேட்கவில்லை. தப்பாமல் இப்படி பேச்சுக் கொடுப்பாள் என்று எண்ணிக்கொண்டே வந்ததினால் ஆசாபங்கம் ஏற்பட்டு பாவம் ஏமாந்து போனார்.

மூச்சுப் பேச்சில்லாமல் சாப்பாடு முடிந்தது. "குழம்பு போடட்டுமா" என்றாவது கேட்பாள் என்று முத்துசாமி பிள்ளையும், "குழம்பு போடு" என்பாரோ என்னமோ என்று குஞ்சம்மாளும், தங்களுக்குள்ளேயே ஆலோசனை செய்து கொண்டார்கள். முத்துசாமி பிள்ளைக்கு மறுபடியும் ஏமாற்றம் ஏற்பட்டது. குஞ்சம்மாளுக்குக் கோபம் கொஞ்சம் அதிகப்பட்டது.

சாப்பிட்டதும் புஸ்தகத்தைக் கூடத் தொடாமல் படுக்கை அறைக்குச் சென்று படுத்துக்கொண்டார். அவருக்கு வெகு பிரியமான வெற்றிலைபாக்குப் போடக் கொள்ளக்கூட மனம் வரவில்லை. அன்றைக்கு குஞ்சம்மாள் வந்து வெற்றிலை பாக்கு கொடுத்தாலொழிய போடுவதில்லை என்று தீர்மானித்துக் கொண்டார். ஒரு சமயம் இப்பொழுதாவது மெல்ல வந்து தட்டி எழுப்பி "வெற்றிலை பாக்கு" என்று சொலலக்கூடும் என்பது முத்துசாமி பிள்ளை யோசனை. ஒவ்வொரு நிமிஷமும் குஞ்சம்மாள் வருகிற சப்தம் கேட்கிறதா என்று பார்த்துக்கொண்டிருந்தார். இவ்வளவு நேரமாகியும் வராததால் சாப்பிடாமலே வேலை செய்துகொண்டிருக்கிறாளோ என்னவோ என்று மெல்லச் சமையல் அறை வரைக்கும் போனார். குஞ்சம்மாள் அங்கே இல்லை. இரண்டாங் கட்டில் பெண்களோடு பேசிக்கொண்டிருப்பதாகத் தெரிந்தது. சமையல் அறைக் கதவைப் பூட்டிக்கொண்டு பாடு பழமை பேச அந்தப் பக்கம் போனாள். முத்துசாமி பிள்ளை மனம் தடுமாறிக்கொண்டிருந்தது.

குஞ்சம்மாளுக்காக எதிர் பார்த்துக்கொண்டிருப்பதாகக் காட்டிக் கொள்ளக்கூடாது என்று நினைத்து, மறுபடியும் படுக்கை அறைக்கு வந்து கண்ணை மூடிப் படுத்துக் கொண்டார். தூக்கம் எங்கே வருகிறேன் என்கிறது! உடம்புபூராவையும் மூடிப் படுத்திருக்கிறாரே யொழிய வீட்டில்

என்ன நடக்கிறது என்பதெல்லாம் நன்றாகத் தெரிந்து கொண்டுதான் இருக்கிறது. எவ்வளவு சிறு சப்தமானாலும் கேட்டுக் கொண்டிருந்தது. இரண்டு மூன்று தரம் மெட்டி சப்தம் காதில் விழுந்தது, ஆனால் அந்தச் சப்தம் அறைக்கு வெளியிலேயே நின்று விட்டது. கொஞ்சங்கூட எதிர் பார்த்த பலன் கைகூடவில்லை.

வெகுநேரம் வரைக்கும் உறக்கம் பிடிக்காமல், காத்துக்கொண் டிருப்பதாகக் காட்டிக் கொள்ளாமலே காத்துக்கொண்டிருக்கும்போது குஞ்சம்மாள் வந்தாள். மூத்துசாமிபிள்ளையின் மனம் பரபரக்கத் தொடங்கிற்று. குஞ்சம்மாள் வந்து "இதற்குள்ளே என்ன தூக்கம் வந்தது" என்று தம்மீது கை போடுவதாக நினைத்துக் கொண்டார். கொஞ்சமேனும் குஞ்சம்மாள் பேச்சுக் கொடுக்காமல் போகவே சற்று மூக்காட்டை நீக்கிப்பார்த்தார். குஞ்சம்மாள் தனியாக வேறொரு படுக்கையில் படுத்திருந்தாள். மூத்துசாமிபிள்ளை மனதில் இடி விழுந்த மாதிரி ஆயிற்று.

"அவளுக்கு உண்மையில் கோபம் வந்திருக்குந்தான். வந்திருந்தால் இப்போது என்ன பிரமாதம் வந்து விட்டது? ஏதோ ஒரு வகையில் பேச்சுக்குள்ளே பேச்சைக் குழப்பிப்போட்டு சரிப்படுத்திக் கொள்ளக் கூடாதா? வழக்கம்போல் வைக்கும் வெற்றிலைச் செல்லங்கூட இன்றைக்குக் கொண்டுவந்து வைக்கவில்லையே. பேச்சுக்கொடுக்க முடியா விட்டால் தொலைகிறது. பக்கத்திலாவது வந்து உட்கார்ந்திருந்தால் என்ன?" என்று மனதுக்குள்ளே பற்பல ஆலோசனைகள் செய்துகொண்டு படுத்திருந்தார். என்ன செய்தும் தூக்கம் மாத்திரம் வரவில்லை. எதையோ பறிகொடுத்ததுபோல் இருந்தது அவர் மனதில். எண்ணாத எண்ணமெல்லாம் பாவம் எண்ணி எண்ணிச் சலித்தார்.

* * * * *

மூத்துசாமிபிள்ளை விடியற்காலம் ஐந்து மணிக்கே எழுந்து விட்டார். அச்சமயத்தில் குஞ்சம்மாள் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தாள். ஓசைப் படாமல் மூத்துசாமிபிள்ளை வெளியே வந்துவிட்டார். அவருக்கு இரவில் நடந்ததெல்லாம் மறுபடியும் ஒருதரம் கண்களுக்கு எதிரில் பிரத்தியக்ஷம் ஆயிற்று. இதன்மேல் அவருடைய மனம் குழப்பத்தில் இறங்கத் தொடங்கிற்று. மனைவிக்குத் தம்மீது காதல் இல்லை என்று ஒரு தரம், தாம் ஆலோசனை செய்வதெல்லாம் அநுபவத்தில் வருவது கஷ்டமல்லவா என்று மற்றொருதரம், இப்படியாகப் பலவித ஆலோசனைகள் தமக்குள்ளேயே எண்ணிக் கொண்டார். முடிவில் சனி ஞாயிற்றுக்கிழமைகள் இரண்டு நாளும் வீட்டுக்குப் போகக்கூடாது என்று தீர்மானித்துக் கொண்டார். இந்தத் தீர்மானத்துக்குத் தகுந்த காரணம் ஒன்றும் இல்லை. குஞ்சம்மாள் மனதுக்குக் கஷ்டம் உண்டாக்க வேண்டும். தம்முடைய மனம் எவ்வளவு கஷ்டப்பட்டது, தாம் எவ்வளவு தொல்லைகட்கு ஆளாக வேண்டியிருந்தது என்ற சங்கதி அவள் அறியவேண்டும். அவ்வளவே.

அவர் பிறந்ததும் வளர்ந்ததும் அந்த ஊர்தான். உயிருக்குயிரான நண்பர்கள் அநேகம் பேர் இருக்கிறார்கள். எந்த நண்பர் வீட்டுக்குப் போனாலும் அந்த இரண்டு நாட்களையும் சுகமாகக் கழிக்கலாம். அவர் அந்த ஊரில் இருப்பதும் இல்லாததுங்கூட யாருக்கும் தெரியாமல் இருக்கலாம். எப்படியும் திங்கட்கிழமை ஸ்கூலுக்குப் போகவேண்டும். ஸ்கூலுக்கு வந்ததும் வராததும் இரண்டாங் கட்டில் குடியிருக்கிறவர்களுடைய பையன் ஸ்கூலில் பார்த்து வீட்டிலே சொல்லுவான். ஆகையால் திங்கட்கிழமை மத்தியானம் வீட்டுக்குப் போகலாம் என்று முடிவு செய்து கொண்டார்.

இவ்விதம் தீர்மானிக்கும்போது அவருக்கு வேறொரு ஆலோசனையும் உண்டாயிற்று. அதாவது இரண்டாங் கட்டில் குடியிருக்கிறவர்களுடைய பையன் முருகேசனைப் பள்ளிக் கூடத்தில் பார்த்தால் ஜாடையாக குஞ்சம்மாள் தமக்காக எதிர் பார்த்துக் கொண்டிருந்த சங்கதியையும் தெரிந்து கொள்ளலாம் என்பதே. இவ்வித ஆலோசனைகளைச் செய்துகொண்டு அவர் அந்த இரண்டு நாட்களிலும் நண்பர்கள் வீட்டிலேயே இருந்து விட்டார்.

* * * * * *

குஞ்சம்மாள் காலையில் எழுந்தாள். எழுந்திருக்கும்போது முத்துசாமி பிள்ளை கட்டிலில் இல்லாதிருப்பதைக் கண்டாள். இவ்வளவு கருக்கலில் எங்கே போனார் என்ற யோசனை வந்தது. இதுவரை எப்பொழுதும் இந்த மாதிரி வழக்கம் கிடையாது.

பத்து மணிக்கெல்லாம் குஞ்சம்மாள் சமையல் வேலை முடித்து வைத்து விட்டு எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறாள். முத்துசாமிபிள்ளை வரவில்லை. சாதாரணமாக ஒவ்வொரு சமயத்தில் ஸ்நேகிதர்களோடு பேசிக்கொண்டே இருந்துவிட்டுச் சிறிது நேரங் கழித்து வருவதும் உண்டு. இன்னும் கொஞ்சங் கழித்து வரக்கூடும் என்று நினைத்துக்கொண் டிருந்தாள்.

பதினொரு மணியும் ஆயிற்று. அதுவரைக்கும் அவர் வராததினால் குஞ்சம்மாள் நெஞ்சில் என்னமோ ஒரு மின்னல் வெட்டினதுபோல் இருந்தது. முருகேசனை அழைத்து "தம்பி உங்கள் வாத்தியார் வருகிறாரா என்று வெளியில்போய் கொஞ்சம் பார்த்துவிட்டு வா சாமி!" என்றாள். முருகேசனும் கடைவீதி எல்லாம் தேடிவிட்டு "வாத்தியார் எங்கும் காணோம்" என்று வந்து சொன்னான். குஞ்சம்மாளுக்குப் பலமான சந்தேகம் பிறந்துவிட்டது.

வழக்கமில்லாத வழக்கம் காலமே கண்டபோதே ஒருவிதமாகத் தான் இருந்தது. அது வர வர வளர்ந்து விட்டது. அதை நினைக்க நினைக்க துக்கமுங்கூட வர ஆரம்பித்தது. அடிக்கடி அகஸ்மாத்தாய் கண்ணீரும் ததும்பத் தொடங்கிற்று.

விசனமும் சந்தேகமும் கலந்து விட்டபடியால் குஞ்சம்மாள் மனதில் பாறையைத் தூக்கி வைத்ததுபோல இருந்தது. தான் நினைக்கிற நினைப்புகளை எல்லாம் அப்படியே நம்பிவிடவும் முடியாமல் இருந்தது. சமையல் அறைக்குள் போய் முன்தானையை விரித்துப் படுத்துக் கொண்டாள். எத்தனையோவித ஆலோசனைகள் வந்து வந்து ஓடிக்கொண் டிருந்தன. இடையிடையே அவர் வருகிறாரோ என்னவோ என்ற ஆசையால் வீதிக் கதவண்டை வந்து வந்து பார்த்தாள் இரண்டு தடவை. இரண்டு தடவையும் ஏமாந்து பெருமூச்சுவிட்டுக்கொண்டு திரும்பி உள்ளே சென்றாள்.

இரண்டாங்கட்டில் குடியிருக்கிறவர்கள் வீட்டில் மாமூல் வழக்கப்படி வீட்டுக்காரரின் சாப்பாடு முடியும்போது சரியாகப் பன்னிரண்டரை மணியாகிவிட்டது அவருடைய மனைவியும் சாப்பாட்டுக் காரியம் எல்லாம் முடித்துக்கொண்டு வெளியே வந்தாள். குஞ்சம்மாள் சாப்பிட்டுவிட்டு அந்த நேரத்தில் அவர்கள் வீட்டுக்குப் பொழுது போக்குக்காகப் பேசிக்கொண்டிருக்க வராததால் கூடத்திலும் படுக்கை அறையிலும் அந்த அம்மாள் தேடினாள். அவ்விடங்களில் காணாததால் சமையல் அறைக்குள் சென்றாள். அங்கே கண்ணை மூடிக்கொண்டு படுத்திருக்கிறாள் குஞ்சம்மாள். இன்னும் சாப்பிடவில்லை என்பதைத் தெரிந்துகொண்டு "என்ன குஞ்சம்! தூங்கு

கிருயா ? இன்னும் சாப்பிடவில்லைபோ லிருக்கிறதே. அவன் இந்த நேரம் வரமாட்டான் என்று தெரிகிறது. எழுந்து சாப்பிடு'' என்ருள். குஞ்சம்மாள் கண்களைத் திறந்தாள். "எழு! எழு!! நேரம் எவ்வளவு ஆகிவிட்டது! இன்னும் சாப்பிடாமல் படுத்துக் கிடக்கிருய்! பசியாகவில்லையா என்ன ?''

"இல்லே. ஏனே பசிக்கவில்லை இந்த நேரம்''

"பசித்த மட்டிலும் சாப்பிடு. பட்டினி ஏன் கிடக்கவேண்டும் ? அவன் எங்கேனும் ஊருக்குப் போயிருக்கிருனே என்னவோ ?

"சொல்லாமலா போய்விடுவார் தகவலாவது கொடுக்காமல்?''

"யாராவது ஸ்நேகிதர்கள் போகலாம் என்றவுடனே புறப்பட்டிருக்கலாம் நீ எழுந்து சாப்பிடு'' என்று சொல்லிவிட்டுப் போனுள்.

குஞ்சம்மாள் எழுந்து வீதிக் கதவு வரைக்கும்போய் ஏமாற்றம் அடைந்து திரும்பவும் வந்து படுத்துக்கொண்டாள். அந்தம்மாள் மறுபடியும் வந்து 'என்னடி அது! சாப்பிடச் சொன்னுல்'' என்ருள்.

"காலமேயிருந்து வயிற்றில் என்னமோ வலிக்கிறது......''

"ஆமாம் எழுந்திரு. பிடிவாதம் செய்யாதே பசியான வரைக்கும் சாப்பிடு.''

குஞ்சம்மாளுக்கு மனேவியாகூலம் மிஞ்சிவிட்டது. நினைக்கும்போதெல்லாம் பயமாகவே இருந்தது. இரண்டாங்கட்டில் வள்ளியம்மாளோடு பேசிக்கொண்டு உட்கார்ந்திருந்தாலும் இந்த ஆலோசனையே மேலோங்கி வந்தது. அந்த ராத்திரி பசியாகவில்லை என்று வீட்டில் இருந்த பிஸ்கத்துகளைத் தின்றுவிட்டுப் படுத்துக் கொண்டாள்.

இரவில் என்ன செய்தும் தூக்கம் வந்தபாடில்லை. அவருக்குத் தன் மீது சரியான கோபம் வந்துவிட்டது என்பதைத் தெரிந்து கொண்டாள். ராத்திரி ஏதோ ஒருவிதத்தில் பேச்சுக் கொடுத்திருந்தால் இப்போது இவ்வளவு மனச் சஞ்சலம் ஏற்பட்டிருக்காது என்றும் ஆலோசித்தாள். தனக்கிருந்த பிறந்த வீட்டு அபிமானம் குறுக்கே வந்து அவருக்குக் கொஞ்சம் ஆத்திரம் உண்டாக்கி யிருக்குமோ என்று எண்ணினுள். தான் விழித்துக் கொண்டிருந்த நேரம் பூராவும் இதே ஆலோசனைதான். அவளை அறியாமலே கண்ணீர் வடிந்து தலையணையை நனைத்தது. ஒருவேளை விடியற்காலம் நேரத்தில் வந்துவிடக்கூடும் என்ற ஆசை யொன்று இடையிடையே தோன்றிக்கொண்டிருந்தது. இந்த ஆசை தோன்ருமலிருந்தால் கொஞ்சமாவது தூக்கம் வந்திருக்காது. தனியாக இருக்கிருள் என்று வள்ளியம்மாள் வந்து துணையாகப் படுத்திருந்தாள். விடியற்காலம் விழிப்பு வந்தவுடனே குஞ்சம்மாள் திடுக்கிட்டு எழுந்தாள். வீட்டு வேலைகள் எல்லாம் தடபுடலாக நடந்தன. ஒன்பது மணிக்குள்ளேயாவது காதலர் வந்துவிடக் கூடும் என்ற ஆசை கொஞ்சம் இருந்தது. இந்த ஆசையினுல் நேற்றைய கஷ்டங்கள் எல்லாம் மறந்து வேலை செய்துகொண்டிருந்தாள். காற்றுக்கு ஜன்னல் 'கிர்ர்'' என்ருலும் வீதிக் கதவுப்பக்கம் திரும்பிப் பார்ப்பாள். "என்ன இன்னும் வரவில்லை'' என்று நினைத்துக்கொண்டாள். பத்து மணியாகியும் அவர் வரவில்லை. வீதிப்பக்கம் பார்த்துக் கொண்டே ஆசாரத்தில் வெகுநேரம் உட்கார்ந்திருந்தாள். பதினென்ருகியும் வரவில்லை. உள்ளே போய்ப் படுத்துக்கொண்டாள். தேம்பித் தேம்பி அழுகையும் வந்தது. சிரமப்பட்டு அடக்கிக் கொண்டாள். ஆனுல் கண்ணீரை அடக்க

முடியவில்லை; இதற்குள் வள்ளியம்மாள் வந்தாள். குஞ்சம்மாள் கண்ணீரை நன்ருகத் துடைத்துக் கொண்டு ஒன்றும் இல்லாதவள்போல் "இன்னும் வரவில்லை பாருங்கள் சித்தி" என்ருள்.

"நான் சொல்லவில்லையா ஊருக்குத்தான் போயிருக்கிருன் என்று. இல்லாதபோனுல் வராமல் இருப்பாஞ அம்மா? நீ சாப்பிடு; அதற்குள் வந்தாலும் நான் இருக்கிறேன் அல்லவா? நீ சாப்பிடு."

"அதற்கென்ன பரவாயில்லை" என்று வெகு நேர வரைக்கும் உட்கார்ந்திருந்தாள். அவரோ வந்தபாடில்லை. வள்ளியம்மாள் மறுபடியும் வந்து சாப்பிடும்படி நிர்ப்பந்தஞ் செய்தாள். தன் வீட்டிலாவது வந்து சாப்பிடச் சொன்ஞள். எங்கும் சாப்பிடவில்லை.

அந்த இரவு குஞ்சம்மாள் நெஞ்சம் மிகவும் பரிதபித்தது. தான் செய்த முட்டாள்தனத்துக்கு நல்ல பலன் அநுபவிக்கிறதாக நினைத்தாள். தான் செய்த தவறுக்காகத் தனக்குள்ளே எத்தனையோ தரம் நொந்துகொண்டாள். அவர் வந்து வீட்டுக்குள் நுழையும்போதே பாதங்களில் விழுந்து நமஸ்காரம் செய்யவேணும் என்று நினைத்துக் கொண்டாள். மிகவும் மன்னிக்க சொல்லவேணும் என்றும் தீர்மானித்தாள். வெள்ளிக்கிழமை இரவு தான் பேச்சு வார்த்தை இல்லாமல் தனியாகப் படுத்திருக்கும் போது அவர் இவ்வித அவஸ்தையே பட்டிருக்கவேண்டும் என்று அவளுக்குத் தோன்றிற்று. அதை நினைக்கும்போது அழுகை வந்தது. வள்ளியம்மாள் பக்கத்தில் படுத்திருக்கிருள் என்று கண்ணை இறுக மூடிப் படுத்துக்கொண்டாள். எப்படியோ விடிந்தது. உறக்கம் மாத்திரம் வரவே இல்லை. இரண்டு நாளும் ஒருவேளை ஆகாரமாகவே இருந்ததஞல் தூக்கமில்லாத தொந்தரவோடு மயக்கமும் வந்தது. கண்கள் கிறுகிறுத்துவிட்டன. மண்டையிடி வலுத்துவிட்டது. "நான் சாப்பாடு வைக்கிறேன் சாப்பிடு" என்ருள் வள்ளியம்மாள்; "வேண்டாம்" என்ருள் குஞ்சம்மாள்.

"கண்கள் குழிவிழுந்து மயங்கிக் கிடந்தும் சாப்பிடமாட்டேன் என்கிருயே குஞ்சம்! இதென்ன உனக்கு நன்ருகவா இருக்கிறது?" என்ருள் வள்ளியம்மாள். குஞ்சம்மாள் ஒன்றும் பேசவில்லை.

முருகேசன் பள்ளிக்கூடத்துக்குப் புறப்படும்போது தாயார் "எண்டா அப்பனே! உங்கள் வாத்தியார் பள்ளிக்கூடத்துக்கு வருவார் அல்லவா?" என்ருள்.

"ஆ" என்று குஞ்சம்மாள் சற்றே முகத்தை வலித்துக்கொண்டு,

"எனக்குத் தலைவலியாய் இருக்கிறது என்று சொல்லு" என்ருள்.

***

முத்துசாமி பிள்ளை பத்து மணிக்கே பள்ளிக்கூடத்துக்கு வந்துவிட்டார். எங்காவது முருகேசன் தென்படுகிருஞ என்று பார்த்தார். ஆஞல் அவன் எங்கும் காணப்படவில்லை. முத்துசாமி பிள்ளை மனதில் என்ன என்னமோ ஆலோசனை செய்துகொண்டிருக்கிருர்.

பின்பு கொஞ்ச நேரத்துக்கெல்லாம் முருகேசன் முத்துசாமி பிள்ளையை வந்து பார்த்தான். என்ன சொல்லுகிருன் என்று கேட்கவேண்டும் என்று முத்துசாமி பிள்ளைக்கு அளவு கடந்த குதூகலமாயிருந்தது. அவனைப் பார்த்துக்கொண்டே "என்ன?" என்ருர்.

"நேற்று நீங்கள் ஊருக்குப் போய்விட்டீர்களோ என்னவோ என்று பேசிக்கொண்டார்கள். இப்போது குஞ்சம் அக்காளுக்குத் தலைவலியும் காய்ச்சலும் பலமாக வந்துவிட்டது" என்றான் முருகேசன்

"என்ன?" என்று மறுபடியும் சிறிது அழுத்திக் கேட்டார்.

"படுக்கையைவிட்டு இந்த நேரமெல்லாம் எழுந்திருக்கவே இல்லை" என்றான். உடனே ஹெட்மாஸ்டரிடம் போய் லீவ் கேட்டுக்கொண்டு முத்து சாமிபிள்ளை வீட்டுக்கு வந்தார்.

வீட்டுக்குள் வந்து பார்க்கும்போது குஞ்சம்மாள் படுத்துக் கிடந்தாள் கட்டிலின் மீது. அவருக்குச் சிரிப்பு வந்தது; அதை அடக்கிக்கொண்டு புன்முறுவலோடு குஞ்சம்மாளிடம் சென்றார். குஞ்சம்மாளும் எங்கிருந்தோ கொஞ்சம் புன்முறுவலைச் சம்பாதித்துக்கொண்டு எழுந்து உட்கார்ந்து, தலைகுனிந்த வாக்கில் அவர்மீது கையைப் போட்டாள். "இதென்ன உடம்பு இப்படிச் சுடுகிறதே" என்றார் முத்துசாமிபிள்ளை. இதற்குள் குஞ்சம்மாள் அவரைக் கெட்டியாய்க் கட்டித்தழுவிக் கண்ணை மூடிக் கொண்டாள்.

"என்ன சங்கதி?" என்றார் முத்துசாமிபிள்ளை.

"கண்ணு கிறுகிறுக்குது கொஞ்சம் இப்படி உட்காருங்கள்"

அவரும் உட்கார்ந்து "ஏன் சாப்பிட வில்லையா?" என்று கேட்டுக் கொண்டிருக்கும்போதே வள்ளியம்மாள்,

"ஆமாடா அப்பா! நேற்றும் முந்தாநாளும் ஒருவேளை ஆகாரத் தோடேயே இருந்தால் கண்ணு கிறுகிறுக்காதா? இந்த நேரமாவது கொஞ்சம் உண்ணு என்றால் ஊ ஹூ என்று தலையாட்டி விட்டாள். நீதான் ஊருக்குப் போனவன் சொல்லி விட்டாவது போகக் கூடாதா?" என்றாள்.

"எச்சில் தெறிக்கிறது கொஞ்சம் எழுங்கள்" என்றார் முத்துசாமி பிள்ளை. அந்த அம்மாளோடு தமாஷ் பேசுவது சகஜம். நெருங்கிய சொந்தமும் கூட.

வள்ளியம்மாள் புறப்பட்டுப் போனவுடன் சிரித்துக் கொண்டே குஞ்சம்மாளைப் பார்த்தார் அவர். அவளுங்கூடச் சிரித்தாள் வெகு சிரமப் பட்டு.

"ஏன் சாப்பிடவில்லை?"

"நீங்கள் ஏன் வரவில்லை? ஆஹா! வெகு ஒழுங்கு போங்கள்."

சந்தாநேயர் கவனிக்க

"ஆனந்தபோதினி" அநுபந்தம் தைமீ முதல் தேதியில் பொங்கல் பண்டிகையின் அறிகுறியாக வெளியிடப்படும். அதுவரை சந்தா நேயர்களைப் பொறுத்துக்கொள்ளுமாறு வேண்டுகின்றோம்.

பத்திராதிபர்.

# வால்மீகி ராமாயணம்.

(ஓரன்பர்.)

இது வேதங்களுக்கு ஒப்பானது என்று சம்க்ஷேப ராமாயணத்தில் 98-வது ஸ்லோகத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. மற்றுமொரு ஸ்லோகம் வேதப்பொருளாகிய பரமபுருஷன் தசரதர் புதல்வராக அவதரித்த பொழுது வேதம் சாக்ஷாத் ராமாயண வடிவங்கொண்டு வால்மீகியினிடமிருந்து உண்டாயிற்று என்று சொல்லுகிறது. ஆதலால் வால்மீகி ராமாயணம் வேதத்திற்கு ஒப்பானது என்பது நிச்சயம். இதற்காதார மென்னவெனில் யஜுர்வேத சங்கிதை 24000 கிரந்தங்களாம். முப்பத்திரண்டு எழுத்துக்களுக்கு ஒரு கிரந்தம் என்று சொல்வது வழக்கம். அது ஏழு காண்டங்களாக வகுக்கப்பட்டிருக்கிறது. அதுபோலவே வால்மீகி ராமாயணமும் 24000-கிரந்தங்களாம். ஏழு காண்டங்களாகவும் வகுக்கப்பட்டிருக்கிறது. ஆனது பற்றியும் இதை வேதத்திற்கு ஒப்பானது என்று சொல்லலாம். இக்கருத்துடன்தான் வால்மீகி முனிவர் முதல் சர்க்கத்தில் முதல் ஸ்லோகத்தில் தைத்திரிய உபநிஷத்தில் ரிஷிகளெல்லாம் ஒன்று சேர்ந்து யோசித்து முத்திக்குத் தபமும் ஸ்வாத்தியாயமும் எதுவென்று "ஸ்வாத்யாப்ரவசன ஏவேதி நாகோ மௌத்கல்ய: தத்திதபஸ் தத்திதப:" என்ற வாக்கியங்களில் நிச்சயித்துள்ள தப: என்ற பதத்தையும் ஸ்வாத்தியாய: என்ற பதத்தையும் உபயோகித்துள்ளார் என்று கூறலாம்.

(2) தைத்திரிய சங்கிதையில் அநேகம் மந்திரங்கள் அடங்கியுள்ளன. அவைகளை நாம் முறைப்படி ஜபித்தால் விசேஷ பலனையும் அடையலாம். அதுபோலவே ராமாயணத்திலும் அநேகம் மந்திரங்கள் அடங்கியுள்ளன. அவைகளை ரிஷி, சந்தஸ், தேவதை முதலியவைகளுடன் ஜபிக்க பற்பல விசேஷ பலன்களையும் பெறலாம். மேலும் மந்திரங்களுக்கெல்லாம் மாதாவாகிய காயத்ரியும் இதில் அடங்கியுள்ளது. காயத்ரியின் முதலெழுத்தைக் கொண்டே இதுவும் துவக்கப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு ஆயிரம் ஸ்லோகங்களுக்கும் ஒவ்வொரு எழுத்தாக காயத்ரி சேர்க்கப்பட்டிருக்கிறது. காயத்ரியின் ஏழு வியாகிருதிகளுக்கு ஒப்பாக இங்கு ஏழு காண்டங்களிருக்கின்றன.

(3) மற்ற காண்டங்களைவிட சுந்தரகாண்டத்தில் அநேகம் மந்திரங்கள் அடங்கியுள்ளன. ஆனது பற்றியே சுந்தர காண்டத்தை பலபேர் நித்தம் பாராயணம் செய்து வருகின்றனர். சுந்தர காண்டத்தைப் பாராயணம் செய்யப் பல முறைகளுண்டு. சுந்தர காண்டத்தில் மொத்தம் அறுபத்தெட்டு சர்க்கங்களிருக்கின்றன. இவைகளை தினமொன்றுக்கு ஏழுவீதம் பாராயணம் செய்ய ஏழாவது தடவையில் ஏழாக முடியும். இது ஒரு முறை. "ராகவோ விஜயம் தத்யாத் மம சீதாபதி ப்ரபு" என்ற வாக்யத்தின்படி ரா2 க4 வோ4 வி4 ஜ8 யம்1 தத்யாத்8,1 ம5 ம,5 சீ,7 தா6 ப1 தி,6 ப்ர2 பு,4 இவ்வாறு கணக்கிட்டு முதல்நாள் இரண்டு சர்க்கங்களும் முறையே 4, 8-ஆக பதினாறு

தினங்களில் பாராயணம் செய்து முடிப்பதுண்டு. இது ஒரு முறை. நாளொன்றுக்கு இருபத்தைந்து சர்க்கங்களாக இருபதத்தைந்து தடவை பாராயணம் செய்து முடிப்பது முண்டு. இதுவும் ஒரு முறை. நாளொன்றுக்கு முப்பத்திரண்டு சர்க்கங்கள் பாராயணம் செய்து இரண்டு நாட்களில் முடிப்பதும் உண்டு. இதுவும் ஒருமுறை. ராமாயணத்தில் ஏழுகாண்டங்களிலும் ஆங்காங்கு அடங்கியுள்ள மந்திரங்களையும் அவைகளின் ரிஷி, சந்தஸ், தேவதை, முதலியவற்றையும் இங்கு கூறுவோம்.

(4) பாலகாண்டத்திற்கு சதாசிவ ரிஷி, அனுஷ்டுப் சந்தஸ், ராமர் தேவதை. தசரதர் புத்திரகாமேஷ்டி செய்ததாகச் சொல்லும் சர்க்கத்தை முப்பத்திரண்டாயிரம் பாராயணம் செய்ய பிள்ளையில்லாதவர்கள் புத்திர பாக்கியத்தை அடைவார்கள். "அகம்வேத்மி மகாத்மானம் ராமம் சத்ய பராக்ரமம்" இதற்கு ராமஷோடசாக்ஷரி மாலாமந்திரம் என்று பெயர் சொல்வதுண்டு. இதற்கு முன்போலவே, ரிஷி, சந்தோ தேவதைகளாம். நாலு அங்குலம் தங்கம் அல்லது வெள்ளித் தகட்டில் ஒரு ஷட் கோணத்தைச் செதுக்கி, ஷட் கோணத்திற்கு வெளியே பதினாறு இதழ்களுள்ள ஒரு தாமரைப் பூவையும் செதுக்கி ஷட் கோணத்தினுள் ஓங்காரத்தையும் ஷட் கோணங்களில் ராம், ராமாய நம: என்ற மந்திரத்தையும், சிம் சீதாயைஸ்வாஹா என்ற மந்திரத்தை ஷட்கோண சந்தியிலும் இதழ்களில் அகம்வேத்மி மகாத்மானம் என்ற மந்திரத்தையும் ஒவ்வொரு எழுத்தாக எழுதி, இரண்டு பூபுரங்களை எழுதி அதற்குள் யந்திர காயத்ரி, மந்திர காயத்ரிகளையும் எழுதி, பூபுரத்தை மெய்யெழுத்துக்களால் அலங்கரித்து உண்டாகும் யந்திரத்தை ராமசஹஸ்ர நாமத்தால் பதினாறு ஆயிரம் பூஜை செய்வதும் உண்டு. அவ்விதம் பூஜை செய்கிறவர்கள் இராமமூர்த்தியின் அனுக்கிரஹத்தால் திவ்ய ஞானம் பெறுவார்கள். "காலதர்யம் கதே" என்று ஆரம்பிக்கப்பட்டிருக்கும் கங்காவதரண சர்க்கத்தை ச்ராத்த காலத்தில் பாராயணம் செய்ய பிதுர்க்கள் திருப்தி அடைகின்றனர். (தொடரும்)

"ஆனந்தபோதினி" மாத சஞ்சிகையை எக்காரணத்தை முன்னிட்டும் நிறுத்தாமல் அந்தந்தத் தமிழ்மாத முதல் தேதிகளிலேயே நமது ஆபீஸினின்றும் அனுப்பிவைப்பது வழக்கமாக இருந்தும் சில சந்தாநேயர்கள் தங்களுக்கு சஞ்சிகை கிடைப்பதில்லை எனப் புகார் செய்துகொண்டே வருவது ஆச்சரியமா யிருக்கிறது. இதற்கு ஜவாப்தாரிகள் நாம் இல்லை. கிரமமாகச் சஞ்சிகை கிடைக்கப்பெறாத நேயர்கள் அந்தந்த தபால் அதிகாரிகளுக்கு விஷயந் தெரிவித்து வேண்டிய ஏற்பாடு செய்யுமாறு வேண்டுகின்றோம்.

பத்திராதிபர்.

# செல்வர் செருக்கு



(நாங்குனேரி கு. அருணாசலம் பிள்ளை)

பூர்வம் செய்த புண்ணிய வசத்தால்
தாரணியோர் சிலர் தனமிகப் படைத்தலும்
கருணைக் கடலாம் கண்ணுதற் கனியை
கனவிலும் கருத்திற் கருதா மனத்தராய்
நல்லன அல்லன உணர்வற் றுராய்
சுற்றத் துன்பம் சற்று நோக்காராய்
தம்முடை வாழ்வில் தருக்கித் திரிவர்
கண்ணொளி பெற்றும் காண்டற்கிலாத
விழிகண் குருடாய் விளங்குவ தென்றும்
செவிப்புல னிருந்தும் கேட்ட லின்றி
செவிடு பட்டுத் திரிவ தென்றும்
வார்த்தை யாடும் வாயது வாய்த்தும்
மூங்கை யாகி யுறைவ தென்றும்
புலவோ ரிசைத்த பொன்னுரை பலவும்
அனுபவித் துரைத்த அருட் கவியாமென
போற்றற் குரித்தே போற்றற் குரித்தே
விண்ணுடைய வேள்வி வேந்தன்
மணிமுடி யதனை மண்ணுறை மன்னனின்
கைவளையோசைக் கனவெழ உகுத்ததும்
அன்னு னூர்ந்திடும் ஐரா வதத்தை
ஒருநூறு வருடம் ஓங்குமிப் புவியில்,
கானுறை களிறாய் இழியவைத் ததுவும்
கணைகழல் வீரக் கௌரவர் கோவை
துணைவலி யோடு சுற்றத் தவரும்
ஒக்க முடிந்திட ஊட்டி வைத்ததுவும்
செருக்கால நேர்ந்த தீமையே யாகும்
உற்று நோக்கின் தனத்தார் கர்வம்
அன்றும் இன்றும் ஒன்று போலவே
அகில மீது அறிதல் கண்கூடு
நிலையாச் செல்வம் நிலையென மதித்து
அலையும் சிந்தை அகந்தைச் செல்வர்காள்!
முற்றத் துறந்த பட்டினத்தடிகளும்
மற்றுமுள்ள ஞானியர் பலரும்
யாக்கையொடு செல்வம் நிலையா தாமென
சாற்றிய பாடலைச் சற்றே நினைமின்!
வாழ்வும் தாழ்வும் வண்டியின் உருளைபோல்
வகுத்தான் வகுத்த படியே யலாது
பிறிதொரு வழித்தாய் பிறங்குவதிலையென
தேர்ந்து தெளிமின்! செருக்குத லொழிமின்!




## கிருஷ்ணலிங் அல்லது துப்பறியும் சீடன்.

(190-ம் பக்கத் தொடர்ச்சி)

**ஆரணி-குப்புசாமி முதலியார்.**

**மனோ:**—நான் உம்மை நம்புகிறேன். ஆனால் என் மனதிலுள்ளவற்றை யும்மிடம் கூறமாட்டேன். நான் கூறுவதைத் தயைசெய்து கேளும். நான் ஒரு பலகீனமான பெண் பிள்ளையே. ஆனால் ஸ்திரீகளுக்குள்ள முழுதைரியமும் எனக்கிருக்கிறது. அதாவது என்னை நேசிக்கிறவர்களுக்காக நான் எத்தகைய கஷ்டங்களையும் தைரியத்தோடு சகித்துக் கொள்வேன். என் தாய் தந்தையர் வியாகூலத்தை யனுபவியாதிருப்பதற்கே நான் வீட்டை விட்டு வந்து விட்டேன். அதற்காகவே யிப்போது மறுபடி யங்கு செல்லமாட்டேன் என்கிறேன்.

**ஆனந்:**—ஆனால் நீ விஷயங்களைத் தவறாய் எண்ணிக்கொண் டிருக்கலாகும்.

**மனோன்:**—அய்யோ! அப்படிப்பட்ட சந்தேகமொன் றுமேயில்லை. நான் அகப் பட்டே னென்பதை யென் தாய் தந்தைய ருணரா திருப்பதே நலம்.

எத்தகைய அத்தாட்சி யிருந்தாலும் மனோன்மணி இழிவான காரியம் எதையும் செய்ய மாட்டாள் என்று யாவரும் கண்டிப்பாய்க் கூறியதன் காரணம் இன்னதென்று ஆனந்தலிங்குக்கு இப்போதுதான் தெரிந்தது. அவன் அவளோடு சற்றுநேரமே சம்பாஷித்த போதிலும், அவளிடம் சத்தியம், உண்மை, பரிசுத்தம், விசுவாசம் முதலிய எல்லாக் குணங்களும் நிறைந்திருப்பதோடு எதற்கும் கலங்காத உறுதியான சித்தமும் இருக்கிறதென்று ஆனந்தலிங் பூரணமா யறிந்துகொண்டான்.

இவளுக்கு யாருடைய கொடூரமான துஷ்ட நடக்கையைப் பற்றியோ நன்றாய் மனதிற் பட்டுவிட்டிருப்பதே இவள் துணிந்து இவ்வாறு நடந்துகொண்டதற்குக் காரணமாய் இருக்க வேண்டுமென்று ஆனந்தலிங் புத்தியிற் றோன்றியது.

ஆனந்தலிங் உடனே தன் மனதை தீர்மானித்துக்கொண்டான். அவன் அக் கன்னிகையை நோக்கி, "அம்மா நான் உன் தந்தையால் அமர்த்தப்பட்டேன். உங்களுடைய நன்மையைக் கவனிப்பது என் கடமையாயிருக்கிறது. ஆகையால் நீ யெதையும் என்னிடம் ஒளிக்காமல் கூறவேண்டும். நீ வீட்டை விட்டுச் சென்ற தினமே உன் தந்தையின் பெட்டியிலிருந்து இலட்சம் ரூபாய் களவு போய்விட்டதென்பதை நீ யறிவாயா?" என்றான்.

மனோன்மணி பயங்கரமான பார்வையோடு "தெரியாது" என்றாள்.

**ஆனந்:**—களவுபோனது உண்மை. எல்லா அத்தாட்சிகளாலும் நீயே அதைக் களவாடினை யென்று தெரிகிறது.

மனோன்மணி கோபத்தோடு எழுந்து நின்று, மறுபடி சமாளித்துக் கொண்டு "என் தந்தை யென்னை யவ்வளவு அற்ப விஷயத்திற்கு என்மேல் கோபிப்பாரென்று நான் நினைக்கவில்லை" யென்ருள்.

ஆனந்:—அப்படியாயின் நீயே களவாடியதாய் ஒப்பிக் கொள்கிருயோ?

மனோ:—வேறு யார் செய்வார்கள்? அது அங்கிருக்கிறதென்று எனக்குத் தெரியும்.

ஆனந்:—ஆனால் உன் தாயும் தந்தையும் நீ யத்தகைய வேலையைச் செய்வா யென்று ஒருபோதும் நம்பமாட்டே னென்கிருர்கள்.

மனோன்மணி:—வேறு யார் எடுப்பார்கள்?

ஆனந்:—குழந்தாய் நீ யப்பணத்தை யெடுக்கவே யில்லை. ஆனால் நீ மிக்க அன்பு கொண்டிருக்கும் ஒருவரை வெளிவராமல் காப்பாற்றவே இப் படிச் செய்கிருயென்று எனக்குச் சந்தேகம் உண்டாகிறது. நீ யெடுக்கா விட்டால் எடுத்தவர்கள் உனக்குத் தெரியும். சூது செய்கிற குணம் உன்னிட மில்லையென்று எனக்கு நன்ருய்த் தெரியும்.

மனோன்மணி தன் மனதிலுள்ளவற்றைச் சுலபமா யறிந்து கொள்ளும் இம் மனிதனிடம் மிக்க பயமடைந்து "ஹோ" என்றலறினுள்.

ஆனந்தவிங் விஷயத்தைச் சட்டென்று மாற்றிவிட்டு "உன்னைக் களவாடிச் சென்ற இந்தக் கள்ளப் பயல்களால் உனக்குக் கெடுதி நேரிடுமென்று பயம் இருக்கிறதல்லவா?" என்ருன்.

மனோ:—அவர்கள் எனக்குக் கெடுதி செய்யமாட்டார்கள். நான் அவர்களுக் காகப் பயப்படவில்லை.

இதைக்கேட்ட ஆனந்தவிங் திப்பிரமை யடைந்து அச் சமாசாரத்தை விட்டு விட்டு,

"நான் கூறியபடி, நான் உன்னைக் கண்டு பிடிக்கும்படி யமர்த்தப்பட் டேன். உன் தந்தை வீட்டில் கொண்டுவந்து சேர்க்கச்சொன்னாரே யன்றி அப் பணத்தைப்பற்றி அவசியமே யில்லை யென்ருர்" என்ருன்.

மனோன்மணி மெதுவாய் அழத் தொடங்கினுள்.

ஆனந்தவிங்:—நீ வீட்டிற்குச் செல்லமாட்டே னென்கிருய். நல்ல திருக்கட்டும். உன் வழியே நீ செல்லும்படி உன்னை விட்டு விட்டு உன் இரக சியங்களை வெளியிடா திருக்கவே எனக்குப் பிரியம்.

மனோன்மணி:—உமக்கு மிக்க வந்தனம்.

ஆனந்த:—இல்லை யில்லை. நீ யெனக்கு வந்தன மளிக்கவேண்டாம். நான் உன் இரகசியங்களை வெளியிடா திருப்பதெல்லாம் பின்னால் உன் இரக சியங்களை யெப்படியாவது கண்டறிய வேண்டுமென்பதே. அதை யெப் படியும் கண்டு பிடித்துவிடுவேன். அதன் பிறகு நீ யகப்பட்ட சங்கதியை யுன் தாய் தந்தையர்க்குக் கூறுவேன்.

மனோன்:—"தாங்கள் இந்த மர்மத்தைக் கண்டறிய முயலவேண்டாம். ஏனெ னில் அதனால் எனக்காவது நான் நேசிப்பவர்களுக்காவது ஒரு நன்மை யும் கிடைக்காது" என்று கூறிக்கொண்டு அழுதுகொண்டே யிருந்தாள்.

ஆனந்தவிங் மிக்க மனவருத்த மடைந்து "குழந்தாய் நீ என்னைப் பூரணமாய் நம்பாதிருப்பது புத்திசாலித்தனமல்ல. இப்போது நான் உன்னை

யினி எதைப்பற்றியும் தொந்திரை செய்யமாட்டேன். ஏனெனில் நீ ஒரே துணிகரமாய் இருக்கிறாய். ஆகையால் நாம் இருவரும் ஒரு உடன்படிக்கை செய்துக் கொள்வோம். அதாவது:—உன் மனம் திருப்தி யடைந்து அனுமதிக்கு மட்டும் நீ யகப்பட்ட சங்கதியை யுன் தந்தையிடம் கூறுவதில்லை. உன் கடமைக்கு நீ எனக்காவது இராஜவேலுக்காவது மறைந்து ஒளித்துக் கொள்வதில்லை யென்று வாக்களித்து விடு. உன்னைப்போலவே இராஜவேலும் ஆபத்திலும் மோசத்திலும் சிக்கிக்கொண் டிருக்கிறேன் என்றான். நீ யப்படியே வாக்களிக்கிறாயா?' என்றான்.

மனோ:—ஆம் என்றாள்.

ஆனந்தலிங் வேண்டுமாயின் மனோன்மணியை மிரட்டி எல்லா இரகசியங்களையும் கூறும்படி செய்துவிடுவான். ஆனால் முன்னமே மிக்க துன்பங்களை யனுபவித்த அவளுக்கு இச்சமயம் இன்னும் துயரை யளிக்க அவனுக்குப் பிரியமில்லை.

எப்படியும் அந்த இரகசியத்தைக் கண்டு பிடித்து விடுவோமென்று ஆனந்தலிங்குக்கு நம்பிக்கை யுண்டு. கண்டு பிடித்த பின் மனோன்மணி தன் வாக்குப்படி நடந்து கொள்வதாயின் வெளியிடாம விருப்பதென்று தனக்குள் தீர்மானித்துக் கொண்டான். தன்னால் கூடுமானால் அக் கன்னிகையை முன் இருந்த சந்தோஷ நிலைமைக்குக் கொண்டுவர வேண்டுமென்பதே அவனுடைய மனப்பூர்வமான தீர்மானம்.

## தீபாவளி ஞாபகம்.

'தீபாவளி' சமீபித்துவிட்டது. ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு நினைவு; வெவ்வேறு கவலைகள். சிறுவர்களுக்கும் சிறுமிகட்கும் "காசைக் கரியாக்காதே வாணத்தை வாங்கிக் கொளுத்து" என்று வேடிக்கையாகச் சொல்லுவது போல் பட்டாஸ் வெடிகளின்மேல் ஞாபகம். பெண்ணைப் பெற்று வரதக்ஷிணை வம்பில் அகப்பட்டு புண்பட்ட ஏழைக்குக் கவலை இதெல்லாம் போகட்டும் இன்னொரு நினைவு மட்டும் வேண்டாம். அப்புனித தினத்தில் ஜீவஹிம்சை புரிய ஆவலோடு காத்திருப்பர் பலர். அது ஒன்றுமட்டும் வேண்டாம்.

அவிசொரிந் தாயிரம் வேட்டலின் ஒன்றன்
உயிர்செகுத் துண்ணாமை நன்று.—

என்பதை மட்டும் நினைவில் வைத்து நடந்தால் தீபாவளியை மற்ற பிராணிகளும் கொண்டாடும்.



# வர்த்தமானப்பகுதி

**சாவியின்றி யோடும் கடிகாரம் :—**

ஜான் ஹார்வுட் என்னும் ஓர் ஆங்கிலேயர் கைகளின் அசைவினாலேயே சாவி கொடுக்கப்படும் கைக்கடிகாரமொன்றைக் கண்டு பிடித்துள்ளாராம். அதற்கு நாம் தினம் தினம் சாவி கொடுக்க வேண்டிய அவசியமில்லை. நாளொன்றிற்குச் சுமார் நான்கு மணி நேரம் அது நம் கையில் கட்டப்பட்டிருப்பின் அதுவே போதுமானதாம். அதே சாவி கொடுத்துக் கொள்ளுமாம். ஒரு முறை கையில் கட்டிக்கொண்டபின் எடுத்து வைத்துவிட்டால் 36 மணி நேரம் ஓடுமாம்.

**பிரயாணம் செய்யும் செடிகள்:-**

ருஷியாவில் 'காற்றுக்கள்ளி' எனப்படும் ஒருவகைச் செடி மிகவும் அதிசயமாயிருக்கின்றதாம். அது வளர்ந்து பெரிதானவுடன் அதன் கிளைகள் கவிந்து செடியையே வேரோடு பிடுங்கிவிடுகின்றதாம். பின்பு கடுமையான காற்று வரும்வரைக் காத்திருந்து காற்றில் அடித்துக்கொண்டு போகப்பட்டு இச்செடி வேறோரிடத்தில் மீண்டும் வேரோடி வளர்கின்றதாம் இது இவ்வாறு வளர்வதும் பிரயாணஞ் செய்வதுமாகவே காலங் கழிகின்றதாம். இதே மாதிரியான செடிகள் பல தேசங்களிலும் காணப்படுகின்றனவாம்.

**காலங்தல ரயில் வண்டி:—**

லண்டன் மாடல் என்ஜினீரிங் கண்காட்சியில் மிகவும் அதிசயமான காட்சி மிக மிகச் சிறிய ரயில்வண்டிதானும். இவ் வென்ஜின் மிகவுஞ் சிறியதாய், அதனுடைய வேலை செய்யும் பாகங்களைப் பூதக் கண்ணாடி கொண்டுமட்டுமே பார்க்கக்கூடியதாயிருக்கின்றதாம். இதனுடைய முழு நீளம் காலே அங்குலந்தானும். இது அடைபட்ட காற்றினால் இயக்கப்படுகின்றதாம். இதில் ஓர் தலை மயிரே சக்கரம் சுற்றும் பம்பாயிருக்கிறதாம்.

**எலியும் நீரெலியும்:—**

ஐரோப்பிய தம்பதிகளின் பெயர்கள் விசித்திரமாயிருக்கும். சமீபத்தில் இல்போர்ட்டில் நடந்த கல்யாணத்தில் மாப்பிள்ளையின் பெயர் 'எலி' (Mouse) ஆம். பெண்ணின் பெயர் 'நீரெலி' (Water Mouse) ஆம். ஆ! என்ன அழகான பெயர்கள்.

**இடையே தங்காமல் 775 மைல் பிரயாணம்:—**

உலகத்திலேயே இடையே ஒரு இடத்திலும் தங்காமல் அதிக தூரம் பிரயாணம் செய்வதில் தென்னமரிக்காவே முதன்மை பெற்றுள்ளது. அங்குதான் சமீபத்தில் இடையே தங்காமல் ஒரு மின்சார என்ஜின் ரயில் வண்டி 20 மணிக்கு 775-மைல் பிரயாணம் செய்து முடித்துள்ளதாம்.

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

சுக்கில௵ கார்த்திகை௴—கலியுகாதி 5031, சாலிவாகனம் 1852,
பசலி 1339—கோல்லமாண்டு 1105—ஹிஜரி 1348,
இங்கிலீஷ் 1929௵ நவம்பர்௴—டிசம்பர்௴

| கார்த்திகை | நவம்பர் | வாரம். | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 16 | சனி | சது4-33 ○58-50 | பர38-13 | சி38-13அ | பௌர்ணமி, வைகாநஸ சிவதீபம், ஜுவாலதோரணம், விஷ்ணுபதி |
| 2 | 17 | ஞா | பிர51-55 | கி※34-13 | சித்60 | கிருத்திகை, பாஞ்சராத்திர தீபம், விஷ்ணு தீபம் |
| 3 | 18 | திங் | துதி44-30 | ரோ28-45 | அமி60 | கரிநாள் |
| 4 | 19 | செவ் | திரி36-58 | மிரு23-0 | சி23-0மர | வியாதியஸ்தர் குளிக்க |
| 5 | 20 | புத | சது29-20 | திரு17-13 | சித்60 | சங்காஷ்டசதுர்த்தி |
| 6 | 21 | வியா | பஞ்22-20 | புன11-50 | அமி60 | அவமாகம், சீமந்தம் |
| 7 | 22 | வெ | சஷ்16-0 | பூச7-8 | மர60 | தனுராயனம் நா-45-38 |
| 8 | 23 | சனி | சப்10-43 | ஆயி3-25 | மர3-25அ | கிருஷ்ணாஷ்டமி |
| 9 | 24 | ஞா | அஷ்6-30 | மக0-43 பூர59-8 | மர0-43சி | அவமாகம், சித்திரம் எழுத, ஆயுதம் உபயோகிக்க |
| 10 | 25 | திங் | நவ3-30 | உத்58-53 | சித்60 | கரிநாள், கிருஷியாரம்பம் |
| 11 | 26 | செவ் | தச1-35 | அஸ்59-48 | சித்60 | வியாதியஸ்தர் குளிக்க |
| 12 | 27 | புத | ஏகா1-3 | சித்60 | சித்60 | சர்வ மத்வ ஏகாதசி |
| 13 | 28 | வியா | துவா2-0 | சித்2-15 | சி2-15அமி | பிரதோஷம், வாகனமேற |
| 14 | 29 | வெ | திர3-28 | சுவா5-0 | சித்60 | மாச சிவராத்திரி, சுபகாரியம் செய்ய |
| 15 | 30 | சனி | ச●6-15 | விசா9-13 | சித்60 | சர்வத்ர அமாவாசை |
| 16 | 1 | ஞா | அமா9-58 | அனு14-20 | மர60 | சுபகாரியங்கள் விலக்க |
| 17 | 2 | திங் | பிர14-45 | கே20-13 | சித்60 | |
| 18 | 3 | செவ் | துதி20-10 | மூல26-55 | அ26-55சி | |
| 19 | 4 | புத | திரி26-13 | பூரா34-8 | அமி60 | |
| 20 | 5 | வியா | சது32-38 | உத்41-35 | சித்60 | |
| 21 | டிசம்பர் 6 | வெ | பஞ்39-3 | திரு49-3 | மர49-3சி | |
| 22 | 7 | சனி | சஷ்44-53 | அவி56-20 | சி56-20அ | |
| 23 | 8 | ஞாய | சப்50-48 | சதை60 | சித்60 | |
| 24 | 9 | திங் | அஷ்53-25 | சதை1-50 | சி1-50மர | |
| 25 | 10 | செவ் | நவ55-10 | பூர6-25 | ம6-25அமி | |
| 26 | 11 | புதன் | தச54-55 | உத்9-8 | சித்9-8மர | |
| 27 | 12 | வியா | ஏகா52-40 | ரேவ9-58 | சி9-58அமி | சர்வ, மத்வ, ஏகாதசி |
| 28 | 13 | வெ | து48-25 | அஸ்8-43 | அமி8-43சி | மச்ச துவாதசி |
| 29 | 14 | சனி | திர42-30 | பர※6-3 | சி6-3அமி | கிருத்திகை, அண்ணாமலை தீபம், சனிப்பிரதோஷம் |

| | | | |
|---|---|---|---|
| | ராகு | குரு | |
| | 4-விரு-புத<br>16-விரு-சுக்<br>23-தனு-புத | | |
| சனி | சூரி<br>செவ் | கே-புத<br>சுக் | |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR,
AT THE "ANANDA BODHINI" POWER PRESS,
SAWYER CHINNATHAMBI MUDALI ST., MADRAS.